எம்பெருமான் ராஜ உருவத்தினின்றும் நீங்கி காளகண்டம், திரிநேத்திரம், சடாமகுடம் முதலிய அருட்டிருமேனியோடு உமையம்மை வாமபாகத்தில் விளங்க ரிஷபாரூடராய்க் காக்ஷிதந்தருளி ஏ சிவதாசனே! ஆபத்துக்காலத்தில் நம்மை நினைத்தமையால் உன்னை ரக்ஷிக்கும் பொருட்டு அரசகோலத்துடன்றோன்றி காப்பாற்றியருளினோம், இப்போது நீ யெங்கு செல்கின்றாய் அதனைக் கூறக்கடவாயென்று திருவாய் மலர்ந்தருளப் பிராமணோத்தமர் சாஷ்டாங்கமாய் வீழ்ந்து பணிந்தெழுந்து இருகரங்களையும் சிரசின்மேல் குவித்தவராய்க் கண்களிலானந்த நீர் பெருகப்பலவாறாகத் தோத்திரஞ் செய்து என்னப்பனே! அடியேனைக் காக்கும்பொருட்டு அரசகோலங்கொள்ள எங்கு கற்றனையோ, அதுவும் ஓர் திருவிளையாட்டுப்போலும். உன்னளவை வேதாகமாதிகலைகளும் அறியாது மயங்குமென்னில் கிஞ்சிக்ஞனாகிய யான் சொல்லக்கிடந்ததொன்றுமில்லையாகும். அதுநிற்க அடியேன் பஞ்சநதக்ஷேத்திரத்தில் வசித்திருந்து இப்போது மரணத்தால் முத்தியைக் கொடுக்கத்தக்க காசியில் வசிக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் அங்கு செல்கின்றேன் என்று கூறிநின்றனர். அவ்வாறு கூறவே சிவபெருமான் அதனைக் கேட்டருளி ஏ சிவதாசனே! மண்ணுலகத்தில் சிவஸ்தலங்களெவற்றிற்கும் மேலானதாய் ஒப்புவமையற்றதாய் ஆங்கு வசிப்பவர்களது மரணகாலத்தில் நாம் எழுந்தருளி தாரகமந்திரோபதேசஞ்செய்து முத்தியைக் கொடுக்கத்தக்கதாயுமிலங்குமத்தலத்தின் மகிமையை உணராதுவிடுத்துவந்தமையால் இவ்விதமான மரணாபத்து உனக்கு நேர்ந்தது. பஞ்சநதக்ஷேத்திரம் ஜனனத்தாலும், மரணத்தாலும், நினைத்தலாலும், தரிசித்தலினாலும், வாசஞ்செய்தலினாலும், மாபாதகங்களை எல்லாம் போக்கி முத்தியை அளிக்கத்தக்கதாகும். அதன் பெருமையை எடுத்துக்கூறப்புகில் மிக விரியும் ஆகையால் நீ இப்போதே ஆங்கு செல்லக்கடவாயென்று திருவாய்மலர்ந்தருளி இத்தடாகத்தில் மூழ்குகவென ஆக்ஞாபித்து மறைந்தருளினார். அங்ஙனமாக பிராமணோத்தமர் உடனே சிவாக்ஞையின்படி தடாகத்தில் மூழ்கி திருவையாற்றில் காவேரியின் மத்தியில் எழுந்து பார்க்க எம்பெருமானாகிய கருணையங்கடல் அவ்விடத்து ரிஷபாரூடராய் காக்ஷிதந்தருளி ஏ சிவதாசா! காசியும் இணையாகாத இத்தலத்தில் உன் மரணபரியந்தம் வசித்து முடிவில் நமது சாயுச்சியம் பெற்று வாழக்கடவாய் என்று திருவாய்மலர்ந்தருளி மகாலிங்கத்தினுள்ளே மறைந்தருளினார். பிராமணோத்தமரும் நீண்டகாலம் அவ்விடத்து வசித்து மர

னந்தத்தில் சிவபரஞ்சுடரின் சரணாரவிந்த நிழலை அடைந்து வாழ்ந்தனர். ஏ ரிஷிபுங்கவர்காள்! சிவபெருமான் திருவருட்டிறத்தை நன்கு உணரக்கடவீர்கள். என்று சிவதாசப் பிராமணன் முத்தி அடைந்த சரித்திரத்தை பூர்த்தி செய்து துர்த்தமன் முத்தியடைந்த சரித்திரத்தைக் கூறுவான் புகுந்தனர்.

பதினோராவது அத்தியாயம் முற்றிற்று.

## ௰௨-வது துர்த்தமன் முத்தி அடைந்த அத்தியாயம்.

நைமிசாரண்யவாசிகாள்! கேட்கக் கடவீர்கள். முன்னொரு காலத்தில் பிராமண குலத்தில் தோன்றி சிறு பருவத்திலேயே தாய் தந்தையருடைய அனுமதிக்குள் அடங்காது மூர்க்கனாய் வளர்ந்து வந்து யௌவன பருவம் வந்த உடனே தன் மனதுக்குத் தோன்றியவாறு நடக்க ஆரம்பித்து பஞ்சமாபாதகத்துக்கு ஓர் நிலைக்களமாய்க் கெட்ட வழியாலும் திருட்டுத்தொழிலாலும் பொருள் சம்பாதித்து மானவெட்கமென்பதின்றி முறை கடந்து நீசஸ்திரீயே ஆயினும் குல ஒழுக்கத்துக்கு மிக இழிவான காரியமாமே என்பதை மனதில் எட்டுணையும் எண்ணாதவனாய் காலவேறுபாட்டையும் நோக்காது புணர்ந்தும், ஆகாரம இன்ன இடத்தில்தான் உண்ணல்வேண்டும, நம் குலத்துக்குரிய ஆகாரம் எதுவோ அதைத்தான் உண்ணல் வேண்டுமென்ற முறையை கடந்து இழிந்த வருணத்தவர்கள் கிரகங்களில் மதுமாமிச முதலிய ஆகாரங்களை உண்டும் கையில் கொலைக்குரிய ஆயுதங்களை வைத்துக்கொண்டு பார்ப்பவர்கள் இவன் மகா வேத வித்துப்போலிருக்கின்றது எனக் கூறுமாறு பரம சாதுக்கள் போன்ற வேடம் தரித்து பிறர் பொருளை வஞ்சனையால் கவர்ந்தும், இன்னும் அளவிறந்த கெட்ட காரியங்களைச் செய்துகொண்டு வந்த துர்த்தமன் என்ற ஓர் பிராமணனிருந்தான். அன்னவன் ஓர் நாள் அளவிறந்த பிராமணோத்தமர்கள் கூட்டம் கூட்டமாய் சிவநாம சங்கீர்த்தனம் செய்துகொண்டு மார்க்கத்தில் செல்லுவதை நோக்கி அவர்களிடத்தே உள்ள பொருளைக் கவர வேண்டுமென்ற எண்ணங்கொண்டவனாய் தானும் பரம வைதிகன் போன்ற வேடம பூண்டு அவர்களுடன் கலந்து சுவாமிகாள்! சர்வ காருண்ய மூர்த்தியாகிய உமாநாயகன் உலகத்தவர் கண்டு தெரிசித்துக் கடைத்தேறுமாறு பல திருவுருவத்தைக் கொண்டெழுந்தருளினும் போலக் காணப்படுகின்ற தாங்களனைவரும் எங்கு செல்கின்

றீர்கள். அதனை அடியேன் தெரிந்துகொள்ளத் தெரிவித்தருளல் வேண்டுமென்று சாஷ்டாங்கமாய் வீழ்ந்து பணிந்து மிக பயபக்தியுடையான் போல நின்றுகொண்டிருந்தனன். அதனைக் கேட்ட பிராமணோத்தமர்கள் யாவரும்களக்கமற்ற மனதையுடையவர்கள் ஆதலின் பரம அயோக்கிய சிகாமணியாகிய அன்னவனை நோக்கி ஏ பிராமணோத்தமா! மேலான உனது பிராமணீகத்தன்மையையும் இனிய வசனங்களையும் கேட்டு மெத்த சந்தோஷம் அடைந்தோம். இப்போது நாங்கள் யாவரும் பஞ்சநத க்ஷேத்திரத்தில் துலா மாதம் முழுமையும் இருந்து காவேரி ஸ்நானம செய்யில் அது மானிட ஜென்மத்திற்கு இன்றியமையாப் பெரும பேறென வேதாகமாதிகள் விதித்திருக்கின்றபடியால் அவவுத்தமோத்தம காரியத்தைச் செய்தற்பொருட்டு ஆங்கு செல்கின்றோம், எங்களை வினவிய நீ யாவன் எங்கு செல்கின்றாய் அதனை ஒருவாறு சொல்லக்கடவாயென்று கேட்டனர். அவ்வாறு அவர்கள் வினவலே துர்த்தமனுனவன் பின்னரும் அவர்களை வணங்கி பிராமணோத்தமர்காள்! என் வர்த்தமானத்தை ஏன் கேட்கின்றீர்கள் நானோ தாய் தந்தை முதலிய ஒருவரும் இல்லாத அனாதையாய் மிகுந்த துக்கத்துடன் அநேக தேச சஞ்சாரஞ் செய்துகொண்டு வருகின்றேன். அங்ஙனமாக வருஞ் சமயத்தில் மகாயோகி ஒருவர் என்னைப்பார்த்து ஏ பிராமணா! நீ மிகுந்த கிலேசமுடையவனாகக் காணப்படுகின்றாய் அது நிவாத்தியாதற் பொருட்டு நான் ஒரு மந்திரோபதேசஞ் செய்கின்றேன் அதனைப்பெற்றுக்கொண்டு பஞ்சநத க்ஷேத்திரஞ்சேர்ந்து காவேரிஸ்நானஞ்செய்து ஆங்கிருந்து ஜெபிப்பாயாகில் துக்க நிவர்த்தியாவதோடு ஜெப சித்தியுமாகி நல்ல கதியையும் அடைவாயெனக் கூறி ஸ்ரீ பஞ்சாக்ஷர மந்திரோபதேசஞ் செய்தருளினர். அதனைப் பெற்றுக்கொண்டு பஞ்சநதக்ஷேத்திரம செல்கின்றேனென்று மெய் யென்பது அணுவளவு மில்லாத பொய்யைக் கூறி நடித்து நிற்க, பிராமணோத்தமர்கள் அதனை உண்மையெனக் கொண்டு தங்களோடு அழைத்துக்கொண்டு திருவையாற்றினிடம வந்து சேர்ந்தார்கள். அங்ஙனமாக யாவரும் வந்து சேர்ந்து எல்லோரும் வசித்தற்கேதுவாகிய ஓர் இடமமர்த்தி அதில் அற்றிரவு தங்கியிருந்து உதயத்தில் துலாமாத ஸ்நான ஆரம்பமாகையால் யாவரும் ஒருங்கு சேர்ந்து ஸ்நானஞ்செய்யப் போகப்புறப்பட்டு தங்களுடைய சாமான் முதலிய யாவற்றையும் பாதுகாத்தற்கு யாவரிருக்கின்றதென்று யோஜனை செய்துகொண்டிருக்க அதனைப் பக்

ளாய் அரசனிடம் வந்து முறையிட அரசன் அதனைத் தெரிந்து அவர்களுடைய பொன்முடிப்பு முதலிய யாவற்றையும் கொடுத்து நடந்த சங்கதிகளையும் கூறி விடுக்கவே பிராமணோத்தமர்கள் அவ்வரசனை ஆசீர்வதித்து தங்கள் திரவியாதிகளைப் பெற்றுக்கொண்டவர்களாய் கிரகத்தினிடம் வந்து தங்கள் இஷ்டப்படி சந்தோஷமாய் வசித்துக்கொண்டிருந்தார்கள். ரிஷிபுங்கவர்காள்! கேட்கக் கடவீர்கள். இவை நிற்க திருவையாற்றை விட்டகன்ற தூர்த்தமனென்பவன் அளவிறந்த தேசங்களில் சென்றும் துன்மார்க்கத்தை அணுவளவேனும் விடாதவனாய் சினைமசெய்துவந்தும கடைசியாய் மரணமடைய எமபடாள் அவனைப் பிடித்துக்கொண்டு தங்கள் உலகம செல்லவே கைலயங்கிரிவாசனாகிய சிவபரஞ்சுடர் நந்திகேஸ்வரரை விளித்து, ஏ நந்தி! எமபடாளால் பிடிக்கப்பட்டு அவர்கள் உலகம செல்கின்ற தூர்த்தமன் மாபாபியாய் ஓர் காலத்துப் பயத்தால் காவேரியில் மூழ்கினவனானாலும், துலாமாதப் பிராதக் காலத்தில் அது கிடைத்தபடியால் சகல பாபத்தினின்றும நீங்கி நம் சிவலோகத்தில் வசிக்கும்படியான தன்மையை அடைந்துவிட்டனன். ஆகையால் நீ சென்று அவர்களிடத்தினின்றும் அவனை விடுத்து இங்கு கொண்டுவரக் கடவாயென்று ஆக்ஞாபித்தருள நந்திகேஸ்வரர் அவ்வாக்ஞையின்படி சென்று தூர்த்தமனை அழைத்துக்கொண்டு வந்து ஈஸ்வரசந்நிதானத்தில் விடவே சிவபெருமான் அன்னவனுக்கு கணாதிபத்தியம் கொடுத்து தன் உலகத்தில் வைத்தருளினர். இதனை அறிந்த எமதர்மனென்பவன் உடனே சிவ சந்நிதானத்தில் வந்து எம்பெருமானே! மாபாதகனாகிய தூர்த்தமன் சிவலோகத்தில் வசித்தற்கான பெரும்பேற்றை அடைந்த காரணம் அடியேன் தெரிந்துகொள்ளுமாறு திருவாய்மலர்ந்தருள வேண்டுமென்று விண்ணப்பித்து அஞ்சலியஸ்தனாய் நிற்க உமாநாயகன் அங்ஙனம் வினவிய எமதர்மனை நோக்கி ஏ தண்டதரா! காவேரி ஜலத்தில் பட்ட காற்று மாபாதகன் மேற்படினும் அவனைப் பாவத்தினின்றும் விடுத்து முத்தியை அளிக்குமென்னில் மாபுண்ணிய தினமாகிய துலாமாதப் பிராதக் காலத்தில் அதில் படிந்து ஸ்நானம் செய்த தூர்த்தமன் பெறும் பேற்றைக் கூறவும் வேண்டுமோ! இதனை அறிந்து நடந்துகொள்ளக் கடவாய் உன் உலகம் செல்லென்று ஆக்ஞாபித்தருள எமதருமன் பரம்பொருளின் பாதபதுமங்களில் வீழ்ந்து பணிந்து விடைபெற்றுக்கொண்டவனாய் தன் உலகம் சேர்ந்தனன் மகரிஷிகாள்! காவேரியின் மகிமை என்னொரு நாவினால் சொல்லும் திறத்ததோ அறிந்து

கொள்ளக் கடவீரென்று தர்த்தமன் சரித்திரத்தை பூர்த்திசெய்து துஷ்ப்பிரக்ஞப் பிராமணன் முத்தியடைந்த சரித்திரத்தைக் கூறுவான் புகுந்தனர்.

௰௨-வது அத்தியாயம் முற்றிற்று.

---

## ௰௩-வது துஷ்ப்பிரக்ஞன் முத்தி அடைந்த அத்தியாயம்.

நைமிசாரண்யவாசிகாள் கேட்கக்கடவீர்கள். பூர்வத்தில் மண்ணுலகத்துக்கு தேவாகமென்ற உலகமறிந்துப் பூஜிக்கத்தக்க பிராமண குலத்திற் பிறந்தும், அக்குல ஒழுக்கங்களைவிட்டு, மாதா பிதா, குரு பந்துக்கள் முதலிய மேன்மையுடையாரின் சொல்வழி நடவாது மகா துன்மார்க்கச் செய்கைகளை கைக்கொண்டவனாய் துஷ்ப்பிரக்ஞன் எனனும நாமத்தையுடைய வோர பிராமணனிருந்தான். அன்னவன் தன் புனிதமை விலக்கிவிட்டு ஓர் இழிந்த குலத்திற் பிறந்தாளாகிய வேசிகையை வைப்பாட்டியாககொண்டு அவள் வீட்டிலேயே போஜன முதலியவைகளும உண்டு மது மாம்ச பக்ஷண ஆகாரியாய் உலகத்தவர் நிந்திக்கும் தன்மையோடு காலங் கழித்துவருஞ் சமயத்தில ஓர் நாள் பஞ்சநத க்ஷேத்திரத்தில் செம்பொற்சோதிலவருடைய நைத்திய உற்சவம நடப்பதைப் பார்க்க அளவிறந்த ஜனங்கள் கூட்டங் கூட்டமாய் சிவநாமசங்கீர்த்தனஞ் செய்துகொண்டு செல்வதைப் பார்த்து தானும " சாமியுனைப்பிரியேனென்றுரைத்துப் பின்னைசன்ற மின்றுடன்னை நோக்கித், தோமிலா நின் மாற்றந்திரம்பியதேதேன்றேன்னீ தொகுப்பாய்த்தந்த, சாமியை நான் பிரியேனென்றேன்றதல்லாலுனையகறுசாமியானல், பூமியிலுன் மாத்தேன்ன விலேயெனன விடையேன்ன புகல்வாயென்றுள் " ( ஓர் பாவியனைவன் மிகுந்த திரவியமுடையனாய் இருக்கும சமயத்தில் காமமிகுதியால் ஓர வைப்பாட்டியை வைத்துககொள்ள அன்னவள் அவனிடத்தே உள்ள பொருளைக் கவர வேண்டி ஆசைமிக உடையாள்போன்று நடித்து என சாமி உன்னை எக்காலத்தும பிரியேனெனக் கூறி அவனிடத்திலுள்ள பொருள் யாவுந் தன் வசமானவுடனே அவனைத் தன் வீட்டுக்கு வாராதிருக்கும்படியான மார்க்கங்களைச் செய்து பிரித்துவிடவே அன்னவன தன் தாய் தந்தை மிக வருந்திச் சம்பாதித்த பொருள் போனதுக்குந் துக்கமடையாது அவள் பிரித்த விஷயத்தில் மிகுந்த துக்கமுடையனாய் ஏ பெண்

னால் பூமியில் வந்து அனேகிறந்த ஜென்மங்களை அடைகின்றார்கள் என்கிறீர்களே. அங்ஙனம் என்ன என்ன பாபம் செய்தவர்கள் என்ன என்ன ஜென்மத்தை அடைகின்றார்கள் அதனை அடியேன் தெரிந்து கொள்ளுமாறு ஒருவாறு தெரிவித்தருளல் வேண்டுமென்று கேட்டுக்கொள்ள நாரதமாமுனிவர் நந்னங் கேட்டு என்னன்பிற்குரியாய்! கூறுகின்றேனை கேட்கக்கடவாய, பிரமகத்தி செய்தவன், கழுதை, பன்றி, ஒட்டை, கஜம, பசு, மான், நாய் முதலிய ஜென்மங்களை அடைவதோடு புலாலுண்ணும சண்டாளனுகவும், ஆசாரியன் மனையாளைப் புணர்ந்தவன, மலத்தை உண்ணும பன்றி, நரி, காகம், கழுதையாகப பிறப்பதோடு, மனிஷிய ஜெனமத்தையும அடைந்து திருடனுகவும, கடகுடிகாரவன், கோட்டான், எறும்பு, ஈ, கொசு, மூட்டைப்பூச்சியாகவும பிறந்து மனிஷிய ஜென்மத்தில் பிணம் சுடும வெட்டியானுகவும, சுவாணத்தைத திருடினவனும், அவனுடன் சினேகிததவனும், எலி, குரங்கு, தவளை, ஆமை, புழு, புறா, அன்னம், கொக்கு, எருமையாகவும பிறப்பதோடு, மானிட ஜென்மத்தில் நீசனுகவும் ஒருவர் சொததை அபகரித்தவன், பிரமராக்ஷசனுகவும, தானியங்களைத் திருடினவன் பெருச்சாளியாகவும், தண்ணீர திருடினவன் நீர்க்காகமாகவும, நெய் திருடினவன் கல், மண் முதலிய தாவரமாகவும, கிளியாகவும, காய்கறி திருடினவன் மயிலாகவும, வாழை பலா நாரத்தை தேங்காய் திருடினவன் சிறு குருவியாகவும், மாமசம திருடினவன் கழுகாகவும, எண்ணெய் திருடினவன் கழுதையாகவும, பட்டு வஸ்திரம திருடினவன சிசலி யாகவும், வெண்பட்டுத திருடினவன் தவளையாகவும, புஷ்பத்தைத் திருடினவன் குரங்காகவும, விளையும் பயிரைத் திருடினவன ஊர்க் குருவியாகவும், வைக்கோல் புல் திருடினவன் புலலட்டையாகவும், பாய் கட்டில் தலையணை வாகனம் பல்லக்கு இவைகளைத் திருடினவன் ஒட்டகமாகவும், தேவாலய அதிகாரத்தை வகித்து நஷ்டம விளைத்தவன் பிசாசாகவும், விபூதி ருத்திராக்ஷம் வஸ்திரம் இவைகளைத் திருடினவன் பெருவியாதி உடையவனுகவும், பொய் சொன்னவன் மழைக்காலத் தவளையாகவும், தாய் தந்தை தமையன் குரு வேதியர் சிவபக்தர் சந்நியாசி சூரியன் சந்திரன் நவக்கிரகம் மற்ற தேவர்கள் திரிமூர்த்திகள் இவர்களையும், வேதாகமாதி புராணங்கள் யாகம் இவைகளையும் நிந்தித்தவன் தேள் பாம்பு நட்டுவக்காலியாகவும், ஒருவருக்குக் கொடுத்த தானத்தை கொடுக்கவொட்டாது செய்பவனும், அடியார்க்கு அன்னமிடாதவனும், உண்ண ஆகாரமின்றி வருந்

னும் தரித்திரனாகவும், ஒருவருக்கு ஒன்றைக் கொடுக்கின்றேன் என்று பின் கொடாதவன் நாசாற்றமுள்ள மூக்கை உடையவனாகவும், வேதத்தில் கூறியுள்ள விதியை விட்டு விலக்கை அநுசரிப்பவன் முள் நிறைந்த செடியாகவும், தேவாலயம் சாவடி குளம் கிணறு இவைகளைக் கெடுத்தவனும், சில்பம் பழகல், சரீரத்திலுள்ள அழுக்கை சாதாரண காலத்தில் தேய்த்துருட்டல், காலமல்லாத காலத்தில் புணர்தல், எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்தல், நித்திரை செய்தல், க்ஷௌரம் செய்துகொள்ளல், அதிக அன்னம் உண்ணல், சூதாடுதல் இவைகளைச் செய்தவனும் நீர்ப்பாம்பாகவும், தேவர்களையும் அடியார்களையும் நிந்திப்பதைக் கேட்பவன் மண்ணுளிப்பாம்பாகவும், அத்துவிதத்தை நிந்திப்பவன் மூக்கிலும் காதிலும் சீயொழுகும் ரோகம் உடையவனாகவும், சூத்திரப்பெண்ணை புணர்ந்த பிராமணன் முதலையாகவும் மீனாகவும் ஆமையாகவும் பிறந்து உழலுவர். ஏ அனவத்தியாங்கி! இதன் விரிவைக் கூறப்புகில் இன்னும் அளவிறந்தனவாகும், ஆனால் சிலர் இங்கு கூறிவந்த ஜென்மங்களைத்தாம் உலகில் உள்ளனவாயினும் இந்த பாபத்தைச் செய்தவர்தான் இந்த ஜென்மத்தை அடைந்தவர்களென அறிதற்கு ஆகமப்பிரமாணமேயன்றி காக்ஷிப்பிரமாணம் இல்லையே ஆதலால்எவ்வாறு அதை நம்பக்கூடுமென மறுத்துக் கூறுவர். கண்மணி! அவர்கள் ஆகமப்பிரமாணத்தை நம்பாவிடினும் "சாஸ்திராயசுகாயச்சா" சாஸ்திரங்களனைத்தும் மக்களது சுகத்தின்பொருட்டெனக் கூறிய உண்மை வசனப்படி பாபகாரியங்களைச் செய்வோர் உலகத்தாரால் நிந்திக்கப்படுவதோடு தனக்கும் ஓர் சுகமில்லாதிருப்பதைக் காக்ஷிப்பிரமாணத்தில் காண்கின்றபடியால் பாபத்தைச் செய்ய அஞ்சவேண்டுவது முக்கியமாகும் அதுநிற்க மேற்கூறிய பாபங்களைச் செய்தவர் அதனைப் போக்கிக்கொள்ளவேண்டுமென்ற எண்ணங்கொண்டு பஞ்சநத க்ஷேத்திரம் சேர்ந்து பத்துவருஷகாலம் அவ்விடத்தே வசித்து பிராதக்காலத்தில் காவேரி ஸ்நானமும் ஒருவேளை ஆகாரமும் செய்துகொண்டு பரம கருணாநிதியாகிய சிவபரஞ்சுடரின் தெரிசனை செய்து வருவார்களாகில் பாப நிவிர்த்தியாய் நல்ல பதவியைப் பெற்றுய்வர் அறிந்துகொள்வாயெனக் கூறியவாறு ஏ ரிஷிகாள்! உங்கட்கு தெரிவித்தருளினேம் நன்குணரக் கடவீர்களெனச் சூதபுராணிகர் பாபிகள் ஜென்மம் அடையும் சரித்திரத்தைப் பூர்த்திசெய்து மரணக்குழி உரைத்த சரித்திரத்தை கூறுவான் ஆரம்பித்தனர்.

பதினான்காவது அத்தியாயம் முற்றிற்று.

## ௫௫-வது மரணக்குறி உரைத்த அத்தியாயம்.

அனவத்தியாதேவி பின்னும் நாதசன்மாவை வணங்கி சுவாமின்! மரணக் குறியையும் அதற்குப் பிராயசித்தத்தையும் கூறியருளவேண்டுமென்று கேட்க நாதசன்மா ஏ பெண்ணே! இராக்காலத்தில சந்திரனைச் சூரியனைப்போல உஷ்ணமாகக் கண்டாலும், சூரிய கிரணங்கள் கண்ணுக்குத் தோன்றாதிருந்தாலும், ஆகாசம் சிவப்பாக இடை இடையே விட்டு விட்டுத் தோன்றினாலும், எலிவளைபோல் ஆசனத்துவாரம் இருந்தாலும், காகக்கூட்டம் போற்றுர்க் கந்தந்தலையில் வீசினாலும், சீக்கிரத்தில மரணமுண்டாகும். சூரியனில் துவாரமாகக் கண்டாலும், தன நிழலில துவாரமாகக கண்டாலும், ஒரு மாசத்தில் மரணமுண்டாகும். ஜலத்திலாவது கண்ணாடியிலாவது, தன் சிரம் வக்கிரமாகவும அற்றதாகவும கண்டால், எமன் தன் வீட்டில் வந்திருக்கின்றான். கண்ணை மூடித் திறக்கும காலத்தில் பூச்சி பறந்ததுபோலிருந்தால், உடனே மரணம. காதைப் பொத்தி சத்தம் கேளாதிருந்தால், எமன் சமீபத்திலிருக்கின்றான். நெருப்பு மயிலின் கழுத்துப்போல தோன்றினாலும், மேகமில்லாத காலத்தில் மின்னல் தோன்றினாலும், மின்னல காலத்தில் ஒளி தோன்றாதிருந்தாலும், மேகத்தில் சூரியகாந்தி தோன்றினாலும, பதினைந்து நாளில் மரணம். பூமியில் சுவாலை தோன்றினால், ஏழு நாளையில் மரணம். சந்திரகாந்தி - துருவநக்ஷத்திரம் - அருந்ததிநக்ஷத்திரம் - கண்ணுக்குத் தோன்றாதிருந்தால், ஒரு வருஷத்தில் மரணம. கிரணமில்லாமல் சூரியனையும, காந்தியில்லாமல் அக்கினியையும் கண்டால், பதினொருமாசத்தில் மரணம. அகாரணமாகத் தன உடம்பு பருமனாகவும், இளைப்பாகவும், கறுப்பாகவும் கண்டால் எட்டு மாசத்தில் மரணம். புறா - கழுகு - பருந்து - காகம. தலையில்பட்டால் ஆறுமாசத்தில் மரணம். சலத்தில் இந்திரதனுசு கண்டால்; இரண்டு அல்லது மூன்றுமாசத்தில் மரணம. தேகத்தில் வேம்புவாசம் பிணவாசம் கண்டால், ஒரு மாசத்திற்குமேல் மரணம். இருதயம் வரகழியாகவிருந்தாலும், தலையில புகைச்சல் கண்டாலும், சரீரமுழுதும நடுக்கலுற்றாலும், பத்துநாளையில் மரணம். பிராணவாய்வு வேகமாக அறுந்ததுபோலிருந்தாலும, பகல் காலத்தில் நக்ஷத்திரத்தைக் கண்டாலும் இராத்திரியில் இந்திரதனுசைக் கண்டாலும் சிவப்பு-கருப்பு வர்ணமாகச் சந்திர சூரியர்களைக் கண்டாலும், சூரிய உதய காலத்தில் எதிர் நின்று நரி ஊளையிட்டாலும் சீக்கிரத்தில் மரணம்,

நாக்கு, அதிகக்கறுப்பாகவும், முகம் அவலக்ஷணமாகவும், கண்ணுஞ் சிவப்புடன் கலந்த கருப்பு வர்ணமாகவும் கண்டாலும், மேற்பாவை சிவப்பாகவும் கருப்பாகவுமிருந்தாலும், சரீரத்தில் உஷ்ணமின்றியிருந்தாலும், எமன் சமீபத்திலிருக்கின்றான், நாபியிலும், மார்பிலும் ஓட்டையாகக் கண்டாலும், தணல்போல் மூத்திரமிருந்தாலும், பல் கறுத்த நிறமாக இருந்தாலும், சீக்கிரத்தில் மரணம்.

சித்திரையில பன்றியாற்றுனடிபடுவதாகவும், குரங்குதன்றலையையசைப்பதாகவும். சுருக்குவாய்வு வீசுவதாகவும், பொன்வாநதியெடுப்பதாகவும், தேனைக்கடித்துத்தின்பதாகவும், தாமரைக்கிழங்கைத்தின்பதாகவும், வெண்டாமரைப்பூவைத் தரிப்பதாகவும் கழுதை பன்றி இவைகள் கட்டின வண்டியிலேறிச் சவாரிபண்ணுவதாகவும், கறுத்த பசுவின் மேலேறுவதாகவும் விளாமிச்சம்வே மாலைதரித்துத் தென்றிசை போவதாகவும் பூதப்பிரேதப்பிசாசங்களைக் கண்டதாகவும் ஆகாயத்திற் கந்தர்வ பட்டணத்தைக் கண்டதாகவும் விருக்ஷங்களைச் சிவப்பு நிறமாகவும் தன் கால் வெட்டுப்பட்டதாகவும் சேற்றிலாவது புழுதியிலாவது தன் காலகப்பட்டிருந்ததாகவும் தன் வஸ்திரஞ் சித்திரவர்ணங்கறுப்பு வர்ணமாக இருப்பதாகவும் கருநிறமுடைய மொட்டைமனிதன் றன்னை வாதிப்பதாகவும், கழுகளாலடிபட்டதாகவும், தன் றலையை விரித்துச் சிரித்து ஆடிக்கொண்டு தென்றிசையிலோடுவதாகவும், கோமயமடுவில் விழுந்ததாகவும், எண்ணெய்க்கொப்பரையில் விழுந்ததாகவுஞ் சொப்பனங்கண்டால் சீக்கிரத்தில் மரணமுண்டாகும். அதற்குப் பிராயச்சித்தமாகப் பஞ்சநதக்ஷேத்திரத்தையடைந்து காவேரிஸ்நானம் பண்ணிச் செப்பேசுஸ்வரரைத் தெரிசித்து மரணபரியந்த மங்குவசித்தால் எமலோகமடையாமற் சிவலோகமடைவார்களென்கச் சூதபுராணிகர் மரணக்குறி உரைத்த சரித்திரத்தைப் பூர்த்திசெய்து ஆலயவரலாறுரைத்த சரித்திரத்தை கூறலான் றுடங்கினார்.

௰௫-வது அத்தியாயம் முற்றிற்று.

---

## ௰௬-வது ஆலயவரலாறுரைத்த அத்தியாயம்.

---

ரிஷி சிரேஷ்டர்காள்! கேட்கக் கடவீர்கள் முன்னொரு காலத்தில் சூரியவம்சத்திற்றோன்றி அக்குல அரசர்களுக்கு ராஜதானியாய் விளங்கும் அயோத்தி மாநகரத்தில் மனுச் சக்கிரவர்த்தி புதல்வனும் சப்த்த தீவுக்கு அரசனுமான பிரிய விரதமகாராஜன் இருந்து மனு

முறைவழாது அரசு செலுத்திக்கொண்டு வருங்காலத்தில் தவவிசேஷத்தால் பிறந்த தன் புத்திரர் எழுவர்க்கும் ஏழுதீவுகளை பாகித்துக் கொடுத்துவிட்டு வாழ்ந்துகொண்டிருக்கும் நாளில் ஓர் நாள் தேசசஞ்சாரஞ் செய்யவேண்டுமென்ற எண்ணங்கொண்டவனாய் மேற்கு திசையை நோக்கிப் பிரயாணமாகிச் செல்ல அது சமயத்தில் ஆகாயவாணி அவ்வரசனை நோக்கி ஏ பிரிய விரதனே! நீ இன்னுங்கொஞ்சதூரஞ் சென்றவுடன் ஒரு அற்புதத்தைக் காண்பாயென்று உரைத்தருள அதைக் கேட்டு அளவிறந்த சந்தோஷமுடையவனாய்ச் சென்றுகொண்டிருந்தனன். அங்ஙனமாக சிறிது தூரம் சென்றவுடனே ஈரேழுலகத்தையும் ஊடுருவிச் செல்லத்தக்க பிரகாசத்துடன் மகாலிங்கத்தினின்றும் சிவபெருமான திருவருட் கோலத்தோடு எழுந்தருளி அன்னவனுக்குக் காட்சிதந்து ஏ பிரிய விரதனே! இவ்விடத்து உலக சிருட்டிக்கர்த்தாவாகிய அளவிறந்த பிரமர்களும், அச்சிருஷ்டியைப் பாதுகாக்கின்ற அளவிறந்த விஷ்ணுக்களும் தோன்றி மறைந்தார்கள். எமது மாயாசத்தி விசேஷத்தாற் செய்யப்பட்ட தாவர ஜங்கம சொரூபங்களும் அஞ்ஞானமாகவே ஆயினை நாம மாத்திரம் இங்கு இடைவிடாது எழுந்தருளியிருக்கின்றோம் அதன்றி உனக்கு காட்சிதந்தருளிய இவ்விடம் பஞ்சநதக்ஷேத்திரமெனவும், ஜெப்பியேசுரமெனவும் உலகம் போற்றிவாழ விளங்கும். ஆகையால் இங்குள்ள நமதாலயம் பின்னசீரணமாயிருப்பதால் அதனை ஜீரணோத்தாரணஞ்செய்து சிவலோகப் பேற்றினைப்பெற்று உய்யக் கடவாயென்று திருவாய்மலர்ந்தருளி மகாலிங்கத்தினுள்ளே மறைந்தருளினார். அங்ஙனமாகப் பிரிய விரதமகாராஜன் மகத்தான சந்தோஷத்தால் பரம்பொருளின் திருவருட் பெருக்கத்தை வியந்து ஆனந்தக்கண்ணீர் பெருக இரண்டு கைகளையும் சிரத்தின் மேற்குவித்த வண்ணமாய் எம்பெருமான் திருவருட் குறியாகிய சிவலிங்க முகூர்த்தத்தின் அருகு செல்லவே ஆங்கு பதினான்குலகத்தை ஊடுருவி எழுந்த ஜோதியானது மிக வொடுங்கி மூன்று ரேகையுடனும் அனேக துவாரங்களுடனும் உருக்கியூற்றிய தங்கம் பொலொளி விட்டு நிற்கும் அச்சிவலிங்கத்தினுள்ளே அடங்குந்தன்மையையும் துவாரங்கள்தோறும் பிரமவிஷ்ணுவாதி தேவர்களையும், துர்வாசர் கௌதமர் சதானந்தர், ததீசி, வசிட்டர் முதலான மகரிஷிகளையும், மற்றுமுள்ள உலகமனைத்தையுங்கண்டு சாஷ்டாங்கமாய் வீழ்ந்து பணிந்தெழுந்து சிவாக்ஞையின்படி உடனே சுவர்ணத்தினால் ஆல்

செய்யத்தக்க உபநயனம், சௌசம், சுத்தாசமனம், திக்கறிந்து செய்யும் மலமூத்திராதி விசர்ச்சனம், விதிப்படிக்குச் செய்யும் ஸ்நானம் இவைபோன்று இன்னும் அளவிறந்தன மனிதர்கள் அவசியம் செய்யவேண்டியதென வேதம் விதித்திருக்கும் கிரிகைகளைச் செய்யாதவர்கள் இம்மையில் பதிதத்தன்மையோடு பாபத்தையும் பெற்று மறுமையில் நரகங்காணியாகப் பெறுவார்கள். அங்ஙனமாகியவைகள் நீங்கப் பஞ்சநதக்ஷேத்திரம் சேர்ந்து காவேரிஸ்நானம் செய்து விபூதி ருத்ராக்ஷம் அணிந்து, நித்தியகாமியானுஷ்டானங்களையும் முடித்துக்கொண்டு பவித்திரபாணியாய் சங்கற்ப, க்ஷேத்திர சிராத்தம், பிதிர்தர்ப்பணமுமே முடித்தவர்களாய் பஞ்சாக்ஷர ஜெபத்துடன் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் ஆலயத்துட்சென்று தெரிசனம், ஸ்தோத்திரம், பிரதக்ஷணம், சிவநாமசங்கீர்த்தனம் முதலியவைகளைச்செய்துகொண்டு ஆங்கு வசிப்பார்களாகில் அவைநிவர்த்தியாய் மோக்ஷானந்தத்தைப் பெறுவர் என்று கூறிய மறைமொழி சத்தியமாயின் இப்பொழுதே சிவபெருமான் பிரத்தியக்ஷமாகி கிருபை பாலிக்கக்கடவரெனக் கூறித் திருவருளை சிந்தித்துக்கொண்டு நிற்க, கருணைப்பெருங்கடல் உடனே ரிஷபாரூடராய் அவ்வேதியர்க்குக் காக்ஷி தந்தருளி ஏ நாதசன்மா! நம் அவதாரமாகிய நீ கூறியவைகளைத்தும் உண்மையேயாம். இதனைப் பொய்யெனக் கொள்வோர் எக்காலத்தும் மேன்மையுற்று வாழமாட்டார். இது சத்தியமாகும், இத்தலத்திலேயே நீ வசிக்கக்கடவாயென்று திருவாய்மலர்ந்து மகாலிங்கத்திலுள்ளே மறைந்தருள நாதசன்மாவும் சிவாக்ஞைப்படி பஞ்சநதக்ஷேத்திரத்திலேயே வசித்து ஈஸ்வரத்தியானம் செய்துகொண்டிருந்தனர். ஏ மகரிஷிகாள்! "மூத்தோர்சொல்வார்த்தைஅமிர்தம்" பெரியோர் வாக்கியமாகிய சாஸ்திரங்களனைத்தும் உண்மையென்ற நீதிவசனப்படி சாஸ்திரம் கூறியவைகளைத்தையும் உண்மையெனக் கடைப்பிடித்து அவ்வழியில் நடப்போர் எப்போதும் மேன்மையே பெறுவர். இது நம் ஆச்சாரியரின் ஆக்ஞையாம். நடக்கக்கடவீர்களெனச் சூதபுராணிகர் நாதசன்மாவுக்கு சிவபிரான் காக்ஷிதந்தருளிய சரித்திரத்தைப் பூர்த்திசெய்து உண்ணத்தகாத வஸ்துக்களை உண்பதால் வரும் பாபநிவர்த்தி கூறிய சரித்திரத்தைச் சொல்ல ஆரம்பித்தனர்.

பதினேழாவது அத்தியாயம் முற்றிற்று.

## ௰௮-வது உண்ணத்தகாத வஸ்துக்களை உண்டதால் வந்த பாப விமோசனம் உரைத்த அத்தியாயம்.

---

நைமிசாரண்யவாசிகாள்! உலகில் ஜீவர்களுடைய ஆகாரத்துக்கென ஏற்பட்டவஸ்துக்கள் பலவாயினும் உண்ணத்தக்கன இவை உண்ணத்தகாதன இவை என வேதம் விதித்திருக்கின்றபடியால் அதில் நிவர்த்திக்கத்தக்கதைக் கூறுகின்றேன் கேட்கக்கடவீர்கள் அவை என்னெனில் வெள்ளைப்பூண்டு, வெங்காயம், கத்திரிக்காய், முருங்கக்காய், சுரைக்காய், பீர்க்கங்காய், முள்ளங்கி, அத்திக்காய் மண்ணிலுண்டாகும் உப்பு, பன்றி, கழுதை, ஒட்டகம், யானை, காகம், பூனை இவைகள் முகர்தல், அல்லது உண்டமிச்சமாகிய பதார்த்தங்கள், முலைப்பால், கழுதைப்பால், பழைய அன்னம், கள்சம்மந்தமான அன்னம், எலிப்புழுக்கை விழுந்த அன்னம், நகத்தாற் கிள்ளிய பதார்த்தங்கள், ரோமம் விழுந்த அன்னம், புனற்பாகம், தேங்காய்நீர், கன்றுபோட்டு பத்துநாளைக்குள் கறந்தபால், கன்றில்லாத பசுவின்பால், ஒட்டைப்பால், காராம்பசுவின்பால், ஆட்டுப்பால், யானை, குதிரையால் ஸ்பரிசிக்கப்பட்ட பதார்த்தங்கள், ஜாதியீனரால் தொட்டவஸ்துக்கள், ஜனனமரணத் தீட்டுடையவர்கள் அன்னம், வீட்டுக்குத்தூரமான பெண்ணின் அநுமதியின்பேரில் சமைத்த அன்னம், உபாயனமில்லாதவருடைய அன்னம், சந்நியாசி தொட்ட அன்னம், கண்ணில்லாதவன் அன்னம், ஜாதியீனரால் சமைக்கப்பட்ட அன்னம், வேதாத்தியயனம் செய்யாதவன் அன்னம், வேதவிதிக்கப்புறம்பான நடையையுடையவர்கள் அன்னம், வேதாகமாதிகளை நிந்திபவர்கள் அன்னம் வருணாச்சிரம ஆசாரத்தை விட்டவன் அன்னம், நன்றிமறந்தவன் அன்னம், பெருவியாதியாளன் அன்னம், விபசாரஞ்செய்பவர்கள் அன்னம், கோட்சொல்லுகிறவன் அன்னம் சிரார்த்தஞ்செய்யாதவன் அன்னம், "புக்குவேட்டகத்தினிலுண்ணும் புன்மையோர்மக்களுட்பதடி என்றுரைக்கும் வையமே" மாமியார் வீட்டிற்கிரமமீறி இருந்து உண்பவன் மனிதரிற் பதராவான் என்ற நீதிவசனப்படி மாமியார் வீட்டிலிருந்தேனும் அல்லது அவர்கள் பொருள்மேலேனும் சாப்பிடப்பட்டவன் அன்னம், மிகத்தரித்திரமுடையான் அன்னம், பெரியோர்களை நிந்திப்பவன், எவரையுந் தூஷிப்பவன், தரித்திரியமுடையவன், பாமதுஷ்டன் மரியாதை இல்லாதவன், புரோகிதன், தொழிற் செய்வோன், உலோபத்தன்மையுடைய

வன், தேவத்துரோக முடையவன், விபூதிருத்திராக்ஷம் அணியாதவன், பாகவதர்களை மோசஞ்செய்தவன், "மண்மாசுபடப்பூசும்" மண்ணைக்குற்ற முண்டாகப்பூசும் என்ற மறைமொழிப்படி வேதம் விதிக்காத நாம தரிப்பவன் தாசி, வேசி, இவர்கள் முதலானவர்களுடைய அன்னத்தை உண்ணுதலும் பாபமாகும். ஆதலால் அங்ஙனம் செய்தோர் அவைகளால் வந்த பாபத்தைப் போக்கிப் புனிதராகவேண்டில் திருவையாற்றை அடைந்து காவேரிஸ்நானஞ்செய்து செபபொற்சோதீஸ்வரப் பெருமான் சரணாரவிந்தத்தில் வீழ்ந்து பணிந்தெழுந்து ஜெப்பியேச்சுர மண்டபத்திலிருந்து ருத்திராத்தியாயத்திற் கூறிய மந்திரங்களை ஒலிக்கும் முறைவழாது அங்கநியாசம், கரநியாசத்தோடு ஜெபித்து மரணபரியந்தம் வாழ்வார்களாகில் அது சித்திக்கும். அறிந்துகொள்ளக் கடவீர்களென்று கூறிமுடித்துப்பின்னும் ஏ மகரிஷிகாள் மேற்கூறி வந்தவற்றுள் சில இந்திரியங்களை நல்வழியிற் செலுத்தாதனவும், சில ரோகவுத்பத்திக்கி காரணமாயுள்ளனவும், சில ஒழுக்கக்குறைவைத் தரத்தக்கனவும், சில அசுத்தத்தன்மையைத் தரத்தக்கனவும், சில அறிவின் பெருக்கத்தை குறைக்கத்தக்கனவுமாகி மனிதர்கட்கு கேடுவிளைக்குந் தன்மையுடையதாதலின் ஆன்றோர் விலக்கத்தக்கது என்று ஏற்படுத்தினார்கள் ஆதலால் "உலகமென்பது உயர்ந்தோர் மாட்டே" என்ற உண்மைப்படி நல்லறிவுடையோர் சாஸ்திரம் கூறியுள்ள அவைகளை அனுசரித்து நடந்து மேன்மையடைவர். அல்லாதார் கூறியவற்றிற்கெல்லாம் ஓர் குருட்டு ஞாயங்கள் கற்பித்துக்கெட்டுழலுவர். இது சத்தியமாகும் என்று உண்ணத்தகாததை உண்டாதல் வரும் பாபவிமோசனம் உரைத்த அத்தியாயத்தை பூர்த்திசெய்து விரசநாமவேதியன் முத்தி அடைந்த சரித்திரத்தைக் கூறுவான் புகுந்தனர்.

௰௮-வது அத்தியாயம் முற்றிற்று.

---

## ௰௯-வது விரசநாமவேதியன் முத்தி அடைந்த அத்தியாயம்.

---

மகரிஷிகாள்! கேட்கக்கடவீர்கள் முன்னொரு காலத்தில் காஞ்சிமாநகரத்தில் பிறந்து வேதவேதாங்கம் யாவற்றையும் நன்குணர்ந்து மகாவிரத சீலனாய் விளங்கிய விரசனென்னும் பிராமணனு

தமன் தீர்த்த யாத்திரையாகப் புறப்பட்டு அநேக தீர்த்தாடனம் செய்து காவேரிதீரமடைந்து ஸ்நானஞ்செய்து ஆங்காங்குள்ள சிவாலய தெரிசனம் செய்துகொண்டு கடாசியாய் பஞ்சநதக்ஷேத்திரம் வந்துசேர்ந்து ஸ்நான சந்தியாவந்தனாதி நித்தியகருமங்களை முடித்துக்கொண்டவனாய் திருக்கோயிலுட்சென்று ஆங்கு தர்மசம்வர்த்தனி சமேதமாய் அடியவர் உய்ந்து கடைத்தேறுமாறு திருக்கோலங் கொண்டருளிய பிரணதார்த்திஹரேஸ்வரரை வணங்கி பூஜை முடித்து தெற்குவாயிலுக்கு மேல்புறமாய் பன்னசாலை ஒன்றமைத்துத் தன்னில்லாளோடு வசித்துக்கொண்டுவந்தனன். அங்ஙனம் வசித்துக் கொண்டு வருங்காலத்தில தனுர்மாதப்பிரவேசமாக அம்மாத முழுவதும காவேரியில திரிகால ஸ்நானம செய்தும, உபவாசமாயிருந்தும் ருத்திர ஜபத்துடன் பஞ்சாக்ஷர மந்திரம் ஜபித்தும், நாள் ஒன்றுக்கு ஆயிரம் பிரதக்ஷணம் செய்துவந்தனர், மாதாந்தத்தில், * அகமருஷண ஸ்நானம், காயத்திரிஜபம் ஔபாசனம் பிரம்மயஜ்ஞம், சூரியோபாசனம் முதலிய கிரியைகளைச் செய்து முடித்து எம்பெருமான் சந்நிதானம் சேர்ந்தவனாய் ஈஸ்வர சரணாரவிந்தத்தில் வீழ்ந்து பணிந்தெழுந்து அஞ்சலிசெய்து கண்களில ஆனந்தவெள்ளம் பெருக திரிலோசனா, தேவதேவாத்மா, காமதகனா, சிவசங்கரா, அந்தகாந்தகா, ஓங்காரமந்திரசொரூபா, ஜெபசித்திகரா, திரிசிரா திரிசிரப்பிரபஞ்சசொரூபா, ஞேயஞானஞாதுருசொரூபா, சத்தியோஜாதாதிபஞ்சமுகாம்புஜா, பிரணதார்த்திஹரா, அம்பிகாபதே எனப் பலவாறாய் ஸ்தோத்திரஞ்செய்து நின்றுகொண்டிருக்கப் பரமசிவன் மலையரையன் திருப்புத்திரியாகிய பார்வதிதேவியார் வாமபாகத்தில் விளங்க நந்தி பிருங்கியாதி சிவகணங்களுடன் ரிஷபாரூடராய் அவ்வந்தணனுக்குக் காக்ஷி தந்தருளி ஏ பிராமண சிரேஷ்டா, உனது பக்தி மிகுந்த ஸ்தோத்திரத்தால் மெத்த ஆனந்தமடைந்தோம். வேண்டிய வரங்களைக் கேட்கக்கடவாய் எனத் திருவாய்மலர்ந்தருள, பிராமணோத்தமன் கருணைக்கடலின் அருள் நிறைந்த சரணபங்கயங்களில் வீழ்ந்தெழுந்து என்னை அடிமைகொண்டாளக் காக்ஷி தந்தருளிய தேவதேவோத்தமா! நாயினேனை காஞ்சிமாநகரத்தைவிட்டு இங்கு வந்து வசித்து உன் சரணசேவைக்காளாய் விளங்

* அகமருஷண ஸ்நானம்—ஜலத்தின் உள்ளிருந்து பஞ்சாக்ஷரஜெபம் 108-முறைசெய்தும் பின்னர் செய்யும் ஸ்நானம்.

யாகம் தபசு ஜபம் சித்திக்கத்தக்கதும், கௌதமர் - தூர்வாசர் - சநாதநர் முதலான மகரிஷிகளும், பிரம விஷ்ணுக்களும, யக்ஷ கின்னர-கிம்புருட-வித்தியாதர - கந்தர்வ சித்தசாத்தியசாரண - அப்சரசு முதலானவர்களும் தவசித்தி அடைந்ததுமாயுமுள்ளது பஞ்சநதக்ஷேத்திரமாகும், ஆகையால் அங்கு சென்று தபம்புரிவீர்களாகில் முத்தி சித்திக்குமென்று திருவாய்மலர்ந்து மறைந்தருள மகரிஷிகள் இமயபருவதசசாரலை விட்டுப் பஞ்சநதத்தையடைந்து, காவேரிநதியில் ஸ்நானம் செய்து, ஜாபால உபநிஷத்திற் சொல்லியபடி விபூதி ருத்திராக்ஷம் தரித்து ஆலயம் வந்து ஐயாறீசுவர மண்டபத்தில் நூறு வருஷகாலமிருந்து, சிவபூஜா துரந்தரர்களாகத் தவம் செய்தார்கள். அப்பொழுது பரமசிவன் பிரசன்னமாகி ஏ மகரிஷிகாள்! உங்கள் தவத்தால் ஆனந்தமடைந்தோம். மற்ற ஸ்தலத்தில் அனேககோடி கற்பகாலமிருந்து செய்தாலும் சித்தியாகாத்தபசு; இந்த ஸ்தலத்திற் கணப்பொழுது செய்யினும் சித்தியாகும். அப்படிக்கில்லாமல் நூறு வருஷ காலமிருந்து தவஞ்செய்தமையால் நீங்கள் மோக்ஷம் அடைவதற்கையமில்லையென்று திருவாய்மலர்ந்தருளி மறைந்தருள மகரிஷிகள் அநேக காலம் வசித்துச் சித்தி முத்தியை அடைந்தார்கள். அறிந்துகொள்ளக் கடவீர்களென்று சூதபுராணிகர் ததீசி முதலிய மகரிஷிகள் முத்தி அடைந்த சரித்திரத்தைப் பூர்த்திசெய்து பிரணதார்த்திஹரநாமம் வந்த சரித்திரத்தைக் கூறுவான் றுடங்கினார்.

௨௦-வது அத்தியாயம் முற்றிற்று.

## ௨௧-வது பிரணதார்த்திஹரரென்ற பேர் வந்த காரண முரைத்த அத்தியாயம்.

கிருதயுகத்தில் எல்லாச் சாஸ்திரங்களையுங் கற்றவனுஞ் சகல மந்திரார்த்தங்களுந் தெரிந்தவனும், வேதாநுஷ்டானந்தவறாதவனுமான சிவசன்மனென்று பிராமணன் க்ஷயரோகத்தாற் பீடிக்கப் பட்டுக் கர்மகாண்ட விதிப்படி அநேக தருமங்களைச் செய்தும், நிவர்த்தியாகாமல் மிகுந்தவிசனத்துடன் பஞ்சநதஸ்தலமடைந்து, கௌதமநந்தனரான சதாநந்தரைக்கண்டு, நமஸ்கரித்துச் சுவாமீன்! நான் வெகு நாளாக வியாதியால் வாதனையடைந்து, கர்மகாண்ட விதிப்படிய அநேக தர்மங்கள் செய்தும், அது நிவர்த்தியாகவில்லை தேவரீர் என்மேற் கிருபைசெய்து, இதுநிவர்த்திக்கி ஓர்வழிசொல்லவேண்டு

மென்றான். சதாநந்தர் ஞானதிருஷ்டியாலவன் பூர்வகருமத்தைத் தெரிந்து, சிவசன்மனே! நீ பூர்வசென்மத்திற் சூரிய கிரகணபுண்ணிய காலத்தில் ஒரு வண்டி தானியம் தானமாகத் தருகின்றேனென்றோர் பிராமணனுக்குச் சொல்லிப்பின் கொடாததனாற் பிரமகத்தி பாவத்துக்கிணையான இந்த க்ஷயரோகம் வந்தது. இது உன்னை மூன்று சென்மம்வரையில் விடாது. ஆகையால் இப்பொழுது சிவாராதனமும், தினமொன்றுக்குப் பிரணவத்துடன் பதினாயிரம் பஞ்சாக்ஷரசெபமும், நூறு விபூதிப்பிரதக்ஷணமும், ஆயிர நமஸ்காரமும், இந்த க்ஷேத்திரத்தில் நீ செய்தால், வியாதி நீங்குமென்று சொல்லியருளினர். சிவசன்மன் தன் குருவாகிய சதாநந்தர் சொல்லியவாறே ஓர் மாதம் வரையிற்செய்து, கடைசிநாள் இராத்திரி நித்திரைசெய்கின்ற சமயத்தில் சிவசன்மனருகிற் சிவபெருமான் சந்நியாசியாக வந்து, கையில் விபூதி எடுத்துச் சிரசுமுதற் பாதம்வரையிலுந் தடவித் திருவடி தீக்ஷை செய்து, மறைந்தருளினார். சிவசன்மா விபூதி தடவுங்காலத்திலறியாமல் நித்திரை செய்யுங்காலத்தில் விழித்தெழுந்து, தன்றேகம் ரோகமில்லாமல் தங்கம்போலிருப்பதைக் கண்டு, ஆச்சரியமடைந்து வந்தவர் பரமசிவனே யென்று தெளிந்து, ஆனந்தமடைந்து, வேதங்களாலும் ஸ்மிருதி புராணங்களாலும் தோத்திரஞ்செய்து, பிரணதார்த்திகரனே! கிருபைசெய்தல்வேண்டுமென்று விண்ணப்பித்திருக்க, உடனே பரமசிவன் பிரசன்னமாகிச் சிவசன்மனே! சென்ற இரவு சந்நியாசிவேடமாக வந்து விபூதி தடவித் திருவடி தீக்ஷை செய்தது யாமே; உன்னாற் பிரணதார்த்திகரனென்றழைத்த பெயரை இந்த ஸ்தலத்தில் யாம் தரித்து அந்த நாமத்தினால் எம்மை அழைக்கின்றவர்கள் பாபநாசஞ்செய்வோம். நீ இந்த ஸ்தலத்திற்றானே வசிப்பாயென்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினார். அதன்பின் சிவசன்மா திருவையாற்றிலேயே நெடுங்காலமிருந்து, மரணமடைந்து, சிவலோகமடைந்தான்.

உ௧-வது அத்தியாயம் முற்றிற்று.

---

## உ௨-வது சர்வ விஜயனை வதைத்த அத்தியாயம்.

---

இரணியாசுரன் பேரனும், பிரகலாதன் புத்திரனுமான சர்வ விஜயனென்னும் அரசன் தான் எல்லா உலகத்திற்கும் அதிபதியாக வேண்டுமென்று, இமயபருவதச்சாரலிலிருந்து பிரமதேவனை நோக்கித் தவஞ்செய்யவே, பிரமதேவன் அவன் தவத்திற்கிரங்கி அங்கே

ருடனாகப் பிரசன்னமாக, உடனே அவ்வசுரனெழுந்து நமஸ்க ரித்துநின்று சுவாமின்! பதினான்கு உலகங்களிலுமுள்ளவர்களாலும் நான் அபஜெயமடையாத வரம் தரவேண்டுமென்றனன். அவ்வாறே தந்தோமென்று சொல்லிப் பிரமதேவன் மறைந்தார். உடனே இமயபருவதத்தைவிட்டுத் தன்னகரத்தையடைந்து, சொர்க்கலோ கத்தை ஜெயிக்கவேண்டுமென்று தன் மந்திரிகளுடனாலோசித்துப் பதினாயிரலக்ஷம் யானை, கோடிலக்ஷங்குதிரை, கோடிலக்ஷந்தேர், கோடிலக்ஷம்பதாதியுடன் புறப்பட்டு இந்திரலோகமடைந்து நானகு வாயிலிலும் வளைந்துகொண்டனன். அதை இந்திரனறிந்து தன சேனைகளுடன் யுத்தத்திற்குவந்துசேர இருதிறசசேனையுங்கலந்து போர்செய்யும்போது, சர்வவிஜயன் குந்தாயுதமெடுத்துத்தேவர்கூட் டத்திற்குட்புகுந்து, அடிக்கவே. அதற்காறறு மற்றேவர்கள் இந்தி ரனை நோக்கி முறையிட்டார்கள். இநதிரன் அக்கினியை நோக்கி அக்கினி தேவா! நீ சீக்கிரம் கவசம் பூண்டு, இரதமேறிச் சென்று, சர்வவிஜயனை யுக்தத்திற் செயித்துவருவாய் என்று சொல்லினன். உடனே அக்கினி தேவன் இரதமேறி யுத்தகளத்திற் சென்று சூலா யுதத்தை எடுத்துப் பதினாயிரமசுரர்களைக் கொன்று சர்வவிஜயனுக் கெதிர்போகும்பொழுது, சர்வவிஜயன் கண்டு ஒரு கதாயுதத்தை யெடுத்து, அக்கினி தேவன்றலையிற்றாக்கினான். தாக்கினவுடன அக்கினிதேவன் வாயால் ரத்தத்தைக் கக்கிக்கொண்டு, பூமியில் விழுந்து மரணமூர்ச்சை அடைந்தனன். உடனே அசுரன் தேவர் கூட்டத்துட் புகுந்து யுததஞ்செய்ய, அதைச சகிக்கமுடியாமல் தேவர்கள் முறையிட்டார்கள். அதை இநதிரன் கேட்டு வாயுவை நோக்கி நீ அசுரனைச சம்மாரஞ்செய்துவாவென்றான். வாயுதேவன் ஊழிக்காற்றைப்போற் போர்க்களத்தினுட் புகுந்து, ஐயாயிரம் அசு ரர்களைக்கொன்று திரிகின்ற சமயத்தில் அசுரன் வாயுவைச் சக்தியா யுதத்தாலடிக்க, வாயு தேவன் மறைந்தோடிப் போய்விட்டான்; அதன் பின் எமனை அனுப்பினான். எமன் புகுந்து யுத்தம் பண் ணுங்காலையில் அசுரன் இருப்புலக்கையைச்சுழற்றியடிக்க அதற்காற் றாமல் எமன் ஓடி ஒளித்தான். அதன்பின் வருணனையனுப்பினான். வருணான் வந்து யுத்தஞ் செய்யும்பொழுது அசுரன் தண்டாயுதத் தாலடிக்க அதற்காற்றாமற் சமுத்திரத்துளோடியொளித்தான். அதன் பின் இந்திரன், குபேரன், அஷ்டவசுக்கள், சப்த்தமருத்துக்கள், தெந்தருவர் முதலான அநேகர்களைக் கூட்டமாகவனுப்ப அவர்கள் வந்து யுத்ததிதினுட் புகுந்து யுத்தம பணணவே அசுரன தன

சேனை குறைவதைக் கண்டு, அதிக கோபத்துடன் உலக்கையைக் கையிலெடுத்துக் கிறுகிறென்று சுழற்றியடித்தான். அதைப் பொறுக்கமுடியாமல் வந்தவர்கள் திசைகள்தோறு மோடி யொளித்தார்கள்; பின் தேவேந்திரன் ஏகனாக நிற்பதை யசுரன் கண்டு இந்திரன் சமீபத்திற் போயினான். போனவுடன் இந்திரன் வச்சிர பாணியாக ஐராவதத்திமேலேறி அநேகமசுரர்களைக் கொன்று, தன் கையிலிருந்த வச்சிராயுதத்தால் அசுரன்றலையிற்புடைக்க, அந்த அடியினாற் சர்வவிஜயன் இரண்டு நாழிகையளவு மூர்ச்சையடைந்து பூமியிற் கிடந்து பின்னெழுந்து கையை மடித்து இந்திரன் மார்பிற் குத்தினான். குத்தினவுடன இந்திரன் யானையினின்றுங் கீழே விழுந்து காயமடைந்து மூர்ச்சையையடைந்தான். அத்தருணத்தில் மாதலியாகிய சாரதி மறைந்து இந்திரனைத்தூக்கிக்கொண்டு அமராவதியடைந்தான். அப்பொழுதந்த சர்வவிஜயன் அமராவதிப்பட்டணத்துட் புகுந்து, தேவமாதர்களைச் சிறைபிடித்ததோடு காமதேனு கற்பகவிருக்ஷம்முதலான இந்திரன் செல்வங்களையெல்லாங் கொள்ளையடித்துக்கொண்டு தன் நகரமாகிய இரணியபுரத்தையடைந்தனன். இந்திரன் இறந்தவர்கள் போக இருந்தவர்களோடு சத்தியவுலகத்தையடையத் தேவருலகம் பாழாய்ப்போயிற்று. சத்தியலோகத்தையடைந்த இந்திரன், தக்ஷப்பிரசாபதி, நாரதர், சனகர், சனந்தனர்—சனற்குமாரர் - சனச்சுநாதர் முதலான யோகிகள் புடைசூழ சரஸ்வதி சமேதராக வீற்றிருக்கும சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமதேவரைக் கண்டு நமஸ்கரித்தெழுந்து நின்று "கமலாசனா; சுவாமின்! பிரகலாதன் புத்திரனான சர்வவிஜயன் தாங்கள் கொடுத்த வரத்தின் பலத்தால் மிகுந்த கருவங்கொண்டு, தேவர்கள், பிராமணர்கள், மகரிஷிகள் முதலான பெரியோர்களுக்குச் சகிக்க முடியாத விடுக்கண் செய்வதுந்தவிர என்னையும் அமராவதிப் பட்டணத்தைவிட்டுத் துரத்திவிட்டான்; நான் வசிப்பதற்கோ விடமில்லை, அடியேனை ரக்ஷித்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய அதைக் கேட்ட பிரமதேவர் இந்திரன் முதலான தேவர்களைப் பார்த்து பூமியிற் பஞ்சநதமென்கின்ற சிவக்ஷேத்திரமிருக்கின்றது. அதில் வசிப்பவர்களுக்குச் சர்வ சத்துருநாசமும், சகலரோகநிவாரணமும், சம்சாரபந்த நிவர்த்தியும், ஜெனனமரணத்தால் வருந்துக்கமும் நிவர்த்தியாகும். அன்றியும் பரமசிவன் காலபைரவராற்றுஷ்ட நிக்கிரகஞ் செய்தருளுவர். அசுரர், இராக்ஷதர், பிசாசு, துஷ்டக்கிரகங்களும், அந்த விடத்திலணுகமாட்டாது. ஆகையால், அந்த க்ஷேத்திரத்தில்

தேவரோடு நீ வசிப்பாயேல் அதையறிந்து சர்வவிஜயன் அங்கு வந்து அநாசாரஞ் செய்ய ஆரம்பித்து காலபைரவரால் மரணத்தை யடைவானென்று திருவாய்மலர்ந்தருள, அதைக் கேட்டுக்கொண்டு இந்திரன் தேவரோடு திருவையாற்றையடைந்து, சிவபூஜாதுரந்தரனாக ஸ்ரீருத்திரத்தால் ஸ்தோத்திரஞ்செய்து நிற்க, பரமசிவன் பிரசன்னமாகி, இந்திரனே; நீ பயமடையாதே; இந்த ஸ்தலத்தில் பாவிகளாகிய விருக்ஷங்களுக்குக் கோடரியாய் நமது கிங்கரனாகிய காலபைரவனிருக்கிறபடியால் அவனால் சர்வவிஜயன் மரணமடைவானென்று சொல்லி மறைந்தருளினார். பிரமதேவர், இந்திரன், பஞ்சநதத்தை யடைந்தபின் நாரதரை நோக்கி நாரதரே! நீர் தீர்த்த யாத்திரைகளுக்குப் போவதானால் பூமியையடைந்து, சர்வவிஜயனைக்கண்டு, இந்திரன் பஞ்சநதத்திலிருக்கின்றானென்று சொல்லி, அந்த விடத்திற்குச் சர்வவிஜயன் போகும்படி செய்குவீராகுமென்றார். அவ்வண்ணமே நாரதர் பூமியில்வந்து அநேக தெய்வ நதிகளில் ஸ்நானஞ் செய்து, திருவையாற்றை யடைந்து பரமசிவனை தெரிசித்து, ஸ்தோத்திரம பண்ணினார். அப்பொழுது பரமசிவன் பிரசன்னமாகி நாரதா! உனக்கு வேண்டிய வரங்களைப் பெற்றுக்கொள்வாயென்றும், நாரதர் ஐயனே! தேவரீர் பாததெரிசனத்தையன்றி அடியேனுக்கு வேறொன்றும் வேண்டுவதில்லையெனப் பரமசிவன் அங்ஙனமளித்தோமென மறைந்தருளினார். நாரதர் திருக்கோயிலைவிட்டு வெளியில் வந்து, திருப்பழனத்தை யுத்தேசித்துப் போகுந்தருணத்தில் இந்திரன் நாரதரைக்கண்டு நாரதரே! அசுரரால் சொர்க்கத்தை விட்டுப் பூமியில் வாசஞ்செய்வது எப்பொழுது நீங்குமென்று கேட்க, நாரதர் பயப்படாதே சீக்கிரத்தில் அசுரர்கள் நாசமடைவார்களென்று சொல்லித் திருப்பழனத்தை யடைந்து, ஆபத்சகாயரைத் தெரிசித்துத் திருச்சோற்றுத்துறையை யடைந்து, ஓதவனேசுவரரைத்தெரிசித்து திருவேதிகுடியடைந்து, வேதிகேசுவரரைத் தெரிசித்து, திருக்கண்டியூரையடைந்து, கண்டீசுவரரைத் தெரிசித்துத் திப்பூந்துருத்தியையடைந்து புஷ்பவனேசுவரரைத் தெரிசித்துத் திருநெய்த்தானமடைந்து, கிருதஸ்தானேசுவரரைத் தெரிசித்து திருவானைக்காவையடைந்து, செம்புநாதரைத் தெரிசித்துத் திருசிராமலையையடைந்து, தாயுமானவரை தெரிசித்து கிழக்கேதிரும்பிச் சுவாமிமலையையடைந்து, சுவாமிநாதரைத் தெரிசித்து, கும்பகோணமடைந்து, கும்பேசுவரரையும் உமாபாகேசுவரரையுஞ் சோமநாதரையுந் தெரிசித்து, மத்தியார்ச்சுனத்தையடைந்து மகாலிங்கேசுவரரைத் தெரிசித்து,

இராமலிங்கத்தை தெரிசிக்கவேண்டுமென்று, இராமேசுவரத்துக்குச சமீபத்தில் போகையில சர்வவிஜயனைக்கண்டு தான் அவனருகில் போய்ச சர்வவிஜயனே! நீ எங்குசெல்கின்றாயென்று கேட்டார். கேட்டவுடன், நாரதரை நமஸ்கரித்து என் சத்துருவாகிய இந்திரனோடு தேவர்களையுந் தேடிப்போகின்றேனென்று சொல்லினான். அதைக்கேட்டு நாரதர் புன்னகைகொண்டு அசுரனே தேவர்கள் திருவையாற்றில் காலபைரவர் காவலால் நிர்ப்பயங்கரராக வசிக்கின்றார்கள். நீ அவ்விடம் போனால் உன் பாக்கியத்தைக்கண்டு, காலபைரவர் ஓடிப்போவார். நீ சீக்கிரமாகப்போவாயென்று சொல்லி, இராமநாதரை தெரிசித்து, அசுரன் பஞ்சநதத்தை யடைவதற்குமுன் தான் பஞ்சநதத்தையடைந்து, பரமசிவனை ஸ்தோத்திரத்தால் பிரத்தியக்ஷமாக வரவழைத்து, சுவாமின்! சர்வவிஜயன் இவ்விடத்திற்றேவர்களிருக்கின்றாரென்று மிகுந்த கோபத்துடன் வருகின்றான். அவனைக்கொன்று தேவர்களைக் காத்தருளவேண்டுமென்று விண்ணப்பித்தவுடன் பரமசிவன் நாரதர் தன்னுடைய வேண்டுதலின்படி அவனைக்கொன்று தேவர்களைக் காத்தருள்வோமென்று திருவாய்மலர்ந்து காலபைரவரையழைத்து, பைரவா! சர்வவிஜயனென்னும் அசுரன் தேவர்களைக்கொல்ல இங்கு வருகின்றான். அவனைக்கொன்று தேவர்களைக் காக்கக்கடவாயென்று சொல்லி மறைந்தார். அதன்பின், சர்வவிஜயன் இலக்ஷங்கோடி சேனையுடன் திருவையாற்றையடைந்து நாலுபக்கமும் வளைந்து, அநேக பாணங்களை எடுத்துத் தேவர்கள்மேலும் பிராமணர்கள்மேலும் ரிஷிகள்மேலும் வருஷித்தான். அதைப் பொறுக்கமுடியாமல் காலபைரவரை நோக்கி முறையிட்டார்கள். காலபைரவர் சூலாயுதத்தைக் கையில் எடுத்துச் சுற்றி அசுரசேனைமேல் விட்டார். சூலமானது அசுர சேனையுட்புகுந்து இரண்டு கடிகைக்குள் சர்வவிஜயனோடு சேனைகளையும் கொன்று திரும்பியது. அதன்பின் இந்திரன் பரமசிவனை வணங்கி விடைபெற்று தேவர்களோடு அமராவதிப்பட்டணம் அடைந்து வாழ்ந்திருந்தான்.

௨௪-வது அத்தியாயம் முற்றிற்று.

---

## ௨௫-வது சுசிகரவேதியனுக்கு கலி நீங்கியதை உரைத்த அத்தியாயம்.

---

அனவத்தியாதேவி நாதசன் மாவை வணங்கி சுவாமின்! கலியின் சுயாலத்தையும் அதை நாசஞ்செய்யும் விதத்தையும் கூறியருளவேண்

வேண்டுமென்று கேட்க, நாதசன்மா பெண்ணே! நாலாவது யுகமாகிய கலியுகத்தில் கோடி ஜனங்களில் ஒருவன் திரிகரணசுத்தியோடு தருமஞ்செய்பவனாகியும், பெருமைக்குத் தருமஞ்செய்பவன் ஆயிரத்திலொருவனாகியும், அவுபாசனம், சந்தியாவந்தனம், வேதாத்தியயனம் செய்தல், தருமவானைக்கண்டசூயைப்படுதல், விரதம், ஆகாரம், எக்கியம், குளம்வெட்டல் இவைகளை தடுத்தல்; பொறுமை, டம்பநிமித்தம் ஆசாரமாயிருத்தல், கௌருசம வேதசாஸ்திரம் கற்ற கருவத்தால் பாவம்செய்தல், கோட்சொல்லல், காரியம் முடியுமளவும் சினேகனாகவும் பந்துவாகவுமிருத்தல், சிரார்த்தத்தை விடுதல், பிதுர்துரோகம், புத்திரதுரோகம், மனையாள்துரோகம், நாயகன்துரோகம், குருத்துரோகம், சிவத்துரோகம், நம்பிக்கைத்துரோகம், இரண்டாசௌசம விடுத்தல, பிராமணர் சூத்திரர்கட்குத் தாசராயிருத்தல், குதிரை, யானை, ரதமுடையவன், க்ஷத்திரியன், சண்டாளன், சூதகன், தூரமாதர், சாதிகெட்டவன், இவர்களைத் தொட்டு ஸ்நானம் செய்யாதிருத்தல், சங்குசக்கரத்தால் சூடுபடுதல், சங்குசக்கரசின்னமுடையவர்களுடன் கலந்து விவாகம்செய்தல், அவர்களுடன் கூடி அத்தியயனம் செய்தல், நான்தான் உயர்ந்தவனென்று சொல்லல், அதர்ம இச்சையால் அற்பாயுளாகி மரணமடைதல், நாலுவருணத்தாருஞ்சங்கரசாதியாதல், காமக்குரோத அகங்காரத்தால வயிரமடைந்து பிறருக்கு வருத்தம்செய்தல், உத்தமர்கள் நீசராகுதல், நீசர்கள் உத்தமராகுதல், அரசர்கள் திரவிய ஆசையடைந்து தருமம் செய்வதுபோல் தருமத்திரவியத்தைக் களர்தல், அபகாரம் செய்து பிறருக்குக் கெடுதி விளைப்பவரோடு கலந்திருத்தல், ஆசாரமில்லாதவனையும், வேதங்கற்காதவனையும், சிராத்தத்தில் பிராமணனாக வைத்தல், சிஷ்டப்பிராமணனுக்குக் கொடாதிருத்தல், குலமாதர்கள் வேசிகளைப்போல் அலங்கரித்துக்கொள்ளல், ஓஷதிகள் பலத்தைக் கொடாதிருத்தல், மேகங்கள் குறைவாகவருஷித்தல், பால்நிமித்தமாக பசுவைப் பாலனம்செய்தல், நதிதீரங்களில் பயிரிடுதல், தருமத்திற்கும், மூடர்களுக்கும், சாதுக்களுக்கும், விதவைகளுக்கும், பாலர்களுக்கும் அபகாரம் செய்து திரவியம் சம்பாதித்தல்; டம்பநிமித்தம் பிதிர் எக்கிய முதல் பஞ்ச எக்கியங்களும் சோமாதியாகங்களும் செய்து அபாத்திரருக்குத் தானங்கொடுத்தல், சவுசம், ஸ்நானம் விதிப்படி செய்யாதிருத்தல், அகாலத்தில் கருமஞ்செய்தல், குயுக்தியால் வேதநிந்தனை, விப்பிரநிந்தனை, எதிநிந்தனை, பதிவிரதா நிந்தனை, பரமசிவனிடத்தில் பக்தியில்லாமல் காட்டேரி, கருப்பன் முத

லான துர்த்தேவதைகளிடத்தில் பக்தி வைத்தல், தேவார்ச்சனை செய்கிறவரைப் பரிகாசம் செய்தல், இராஜ சேவகர்கள் திரவியநிமித்தம் மனிதர்களை வாதைப்படுத்தல், தானம், எக்கியம், செபம் இவைகளால் வரும் பலனை விற்றல், சண்டாளரிடத்தில் வாங்கியுண்ணல், சூத்திரான்னம் புசித்தல், தாசி விதவை இவர்களுடன் புணர்தல், மாதாகள் கணவனை நிந்தித்தல், கடவுளை மறத்தல் முதலான கெடுதிகளுண்டாகும். அங்ஙனமாக இந்தக் கலியுகத்தின் ஆதிகாலத்தில் வேதவேதாங்க பாரங்கதனும், தர்மசாஸ்திர மர்மத்தை அறிந்தவனும், வருணாசிரமதருமம தவறாதவனும், சிவத்தியானத்துடன் சிவபூஜாதுரந்தரனும், விபூதிருத்திராக்ஷதரனும், பாவமில்லாதவனுமான சுசிகரனென்னும் பிராமணன் இருந்தனன். அன்னவன் கிருஷ்ணன் வைகுந்தமடைந்த பின் கலிவாதை அதிகரித்தெந்தவிடங்களிலும் பாவிகளாகவிருப்பதைக் கண்டு இந்த யுகதர்மம் நம்மையும்பற்றி நரகமடையச்செய்யும் ஆதலால் பரமசிவனைச சரணமடைவோமென்று தன்னிடம் விட்டுத் தீர்த்த யாத்திரை செய்வானாகி புறப்பட்டுப்போக பின்னாகக் கலிபுருஷன் கருநிறத்தையுடையவனாய்க் கையிற்கத்தியை பிடித்துக்கொண்டு தன்னை அதட்டி வருவதைக்கண்டு பயந்து பஞ்சாக்ஷர மந்திரத்தைச் செபித்தனன். அந்த ஜெபம் கேட்டுக் கலிபுருஷன் மறைந்தான். மறைந்தவுடன் இன்னும் அவன் நம்மைத் தொடர்ந்துவருவானோவென்று ஒரு விருக்ஷத்தினடியினுட்கார்ந்து திரும்பிப் பார்த்தான். பார்த்தபொழுது நெடுந்தூரத்தில் கலிபுருஷன் வருவதைக் கண்டு கீழே விழுந்து மூர்ச்சையடைந்து தெளிந்து முன் பஞ்சாக்ஷர மந்திரத்தால் மறைந்தவன் இப்பொழுது கண்ணுக்குத் தோன்றுகின்றான். இன்னும் அந்தப் பஞ்சாக்ஷர மந்திரத்தையே செபிப்போமென்று தியானத்துடன் செபிக்கக் கலிபுருஷனைக் காணானாகி சந்தோஷமடைய அப்பொழுது ஆகாயத்தில் ஓ பிராமணனே ! கலிபுருஷனுன்னை எவ்விதத்திலும் பிடிப்பான் ஆகையால் பஞ்சநத க்ஷேத்திரம் தவிர மற்றெல்லாவிடங்களிலும் கலிபுருஷன் வியாபித்திருக்கின்றபடியால் நீ சீக்கிரத்தில் பஞ்சநதத்தை அடைவாயென்று அசரீரியுண்டானது. உடனே பஞ்சாக்ஷர ஜெபத்துடன் பஞ்சநதத்தையடைந்து திரிகாலக் காவேரி ஸ்நானம் செய்து வேதமாதாவாகிய காயத்திரி மந்திரத்தை ஆயிரத்தெட்டுருச் செபிப்பதோடு பஞ்சாக்ஷர மந்திரமும் செபித்து பிரதக்ஷண நமஸ்காரத்துடன் பஞ்சநதீசனைத்தெரிசித்து ருத்திரமந்திரத்துடன் ருத்திராபிஷேகம்செய்து சதா ருத்திர மந்திரத்தாற் றோத்தி

ரம் செய்தனன். செய்யவே பரமசிவன் பிரசன்னமாக சுசிகரன் நமஸ்கரித்தெழுந்து நின்று சுவாமின்! என்னைக் கலியனுகாது காத்தருளவேண்டுமென்ன சிவபெருமான் சுசிகரனே! எம்மிடத்தி லுள்ள பயத்தால் கலிபுருஷன் இந்த ஸ்தலத்தில் வரமாட்டான், அந்தப் பயமுனக்கில்லை. ஜப்யேசுரபதி, பஞ்சநதீசா, பிரணதார்த்திகரா! வென்று நீ செபித்தால் துற்சொப்பனம் துஷ்டகிரகம், பூதப்பிரேதப்பிசாசம், விஷம், அபசாரம், தாரித்திரம், துக்கமிவைகள் நாசமாகும். அர்த்தோதயம் மகோதயம் சூரியசந்திர கிரகணம் இந்த நாட்களில் பஞ்சநத காவேரி ஸ்நானம் செய்பவர்கள் பரதிரவியாபகாரம், இம்சை, பரதாரகமனம் முதலான காயிக பாதகத்தையும், கோட்சொல்லல், மாறுபடப்பேசல், குரூரமாகச் சொல்லல், ஆனவாசிகபாதகத்தையும்; பரதிரவியத்தியானம், பிறருக்கு நஷ்டத்தையெண்ணல், வீணாகவுகாரப்படுதல், ஆனமானசிக பாதகத்தையும் போக்கிக் கோடி கோதானம் செய்த பலத்தையடைவார்கள். அன்றியும் காவேரி ஸ்நானம் கங்காநதியிலும் நூறுபங்கு அதிகப் பலத்தையும் பூமிதான பலத்தையும் கொடுக்கும். பஞ்சநத க்ஷேத்திரத்தில் வஸ்திரம் தானியம், திரவியம், இவை முதலாகிய தானங்கள் செய்தவர்கள், ஆயுள்விருத்தி தனதானிய சம்பத்து புத்திர பௌத்திர சமயுக்தராக அனேக சௌபாக்கியத்தையடைந்து, பரத்திற்சிவலோகசாயுஜ்யத்தை அடைவார்கள். அவ்விடத்து வித்தியா தவசு விரதமுள்ள பிராமணன் புண்ணியகாலங்களில் தானபாத்திரனுவான். மகரசங்கிராந்தி முதலாகிய புண்ணிய காலங்களில் காவேரி ஸ்நானம் செய்து, நம்மை தெரிசித்தவர்கள் மோக்ஷமடைவது சத்தியம்; ஆதலால் நீ இந்த ஸ்தலத்தில் வசித்துப் புண்ணிய காலங்களில் காவேரி ஸ்நானம் செய்து, நம்மைத் தெரிசித்தால் மோக்ஷமடைவாயென்று பரமசிவன் சொல்லிமறைந்தருளினார். அவ்வண்ணமே சுசிகரன் மரணபரியந்தம் திருவையாற்றில் வசித்து மோக்ஷமடைந்தான்.

உங-வது அத்தியாயம் முற்றிற்று.

---

## உச-வது தருமநாசன் சாரூபபதவியை அடைந்த அத்தியாயம்.

---

திரேதாயுகத்திற் கோதாவரி தீரத்தில் முற்கலவம்சத்திற் பிறந்த தர்மநாசனென்ற பிராமணன் வருணாசிரம தர்மத்தை

விட்டு, விலக்கான காரியங்களைச் செய்து வந்தான். அவனுக்குத் தாமிசொரூபியாக ஓர் புத்திரன் பிறக்க அப்புத்திரனுக்குத் தருமசேதுவென்று பெயரிட்டுச் சாதகாமமுதல் உபநயன பரியந்தம் வேதோக்த பிராமணரால் செய்வித்து, விவாகமுஞ் செய்வித்தான். பின் தருமசேது புண்ணிய கிர்த்தியமென்பவைகளுடன் விசேஷமென்னும் பிரசித்தியடைந்தான். அக்காலத்திலவன் தந்தையாகிய தருமநாசன் மகோதரவியாதியாற் பீடிக்கப்பட்டுத் தனக்கு சீக்கிரத்தில் மரணம் நேருமென்று நிச்சயித்து, புத்திரனை யழைத்துத் தருமசேதுவே! நான் சொன்ன முதல் வருணாச்சிரம தருமத்தை விட்டுப் பாவத்தொழில்களிற் பிரவேசித்துப் பாவஞ் செய்ததனையால்; நரகமடைவேனென்று என் னிருதயம் நடுங்குகின்றது. நான் நரகமடையாமற் செய்வதுன் கடமை யென்றனன். அதைக்கேட்ட தருமசேது ஐயா! பிதுர்வாக்கியத்தைப் பரிபாலனஞ் செய்யவேண்டியது புத்திரர் கடமையாதலால், நான் செய்யவேண்டியதைச் சொல்லவேண்டுமென்று கேட்க தருமநாசன் புத்திரன் சொல்லியதற் சந்தோஷமடைந்து, தருமசேதுவே! நான் மரணமடைந்தபின் என்னுடைய அஸ்திகளை இராமசேதுவில் ஸ்தாபனம்பண்ணினால் எனக்குத்தம ஜென்மங்கிடைக்குமென்றான். தருமசேது தந்தைசந்தோஷிக்க அவ்வாறே செய்கிறேனென்றுரைத்தவே சிலநாட்சென்றபின் மகோதரவியாதியாற் தருமநாசன் மரணமடைய அவன்மனையாளும் அனுமரணமடைந்தாள். தருமசேது தாய் தந்தையிருவரையுந் தகனம்பண்ணி, அந்தியேஷ்டி முதல் சபிண்டீகரணபரியந்தஞ் செய்து தவிர வருஷாப்திகபரியந்தஞ் செய்யுங் கருமங்களையுஞ் செய்து, இருவர் அஸ்தியையும் ஓர் பெட்டியில் வைத்தெடுத்துக்கொண்டு சேதுவை யுத்தேசித்து, நியமத்துடன் புறப்பட்டு வருங்காலையிற் பஞ்சநதமடைந்து, சங்கற்ப பூர்வமாகக் காவேரிஸ்நானம், க்ஷேத்ர சிராத்தம், தர்ப்பண முதலியவைகளுஞ் செய்து சிவாலயமடைந்து பிரணதார்த்திகரரைக் தெரிசித்துப் பிரதக்ஷண நமஸ்காரஸ்தோத்திரத்துடன் பஞ்சாக்ஷரமந்திரத்தை செபித்து, அன்றையத்தினமுபவாசமிருந்து; மறுநாட்பாரணை செய்து, தன்னாத்மாவைக் கிருதார்த்தமாகவெண்ணி; ஸ்தலமான்மியத்தையுங் காவேரி மான்மியத்தையும் விசாரித்து துர்வாசர்-கௌதமர்-சதானந்தர்-வசிஷ்டர் முதலான ஆறுகோடி மகரிஷிகளும், அநேகஞ் சந்நியாசிகளும், வானப்பிரஸ்தர்களும், பிரமசரிய ஆச்சிரமத்தர்களும், சோமயாகமுதல் மற்ற யாகங்களையுஞ் செய்துமுடித்த தீக்ஷிதர்களுந் ஆங்கு தவஞ்செய்

தைக்கண்டு, நாமுமிந்தஸ்தலத்திலொருமாதம் வசிப்போமென்றொரு வீட்டில் அஸ்திப்பெட்டியை வைத்துச் சுயம்பாகத்காலேகவாரம் போசனஞ் செய்து, பஞ்சாக்ஷரசெபத்துடன் வசிக்கின்ற நாட்களில் ஓர் நாள் நித்திரை செய்கையில் சொப்பனத்திற்றன் பிதாவைச்சந்திரார்த்த சேகரனாகவும், சடாதாரியாகவும், முக்கண்ணனாகவும், விபூதிதரித்த சரீரமுள்ளவனாகவுங் கண்டு எழுந்து நமஸ்கரித்து நோக்கி என் ஐயனே! யுனக்கிந்த சிவசொரூபம வந்தகாரணத்தைச் சொல்லவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்ய தருமநாசன், நானிறந்தபின் எமதூதர்கள் இருப்புப் பாசங்களாற்கட்டியெண்பத்தாறுயிரம் யோஜனை தூரமுள்ள பயங்கரமான எமமார்க்கத்திற் கொதித்த சேற்றிலும் கொதித்த மணலிலும, கல்லிலுமுள்ளிலும் முசலாயுதத்தாலடித்திழுத்தும், கல் மழையாலும் நெருப்புமழையாலும் வாதையடையச் செய்து பத்து நாட்சென்று பதினோராநாற் எமலோகத்திற்கருகே போகையிற் பாவிகளாற் கடக்கக்கூடாத வைதரணியென்னு நெருப்பாற்றைக்கண்டேன். அதிலிறங்கென்று எமபடாள் சொன்னதைக்கேட்டுப் பயந்தேன்; உடனே எமதூதர்கள் என்னையதிற்றள்ளினார்கள்; நானதிலொருநாள் முழுதுங் கிடந்து தத்தளித்தேன். பனிரெண்டாநாள் பசுவொன்று வந்து தருமநாசனே! நீ வைதரணி நதியைத் தாண்டவேண்டி யுன்புத்திரனாற் பனிரெண்டாநாள் சவுண்டி கரணத்திற் சத்ப்பிராமணனுக்குத் தானங்கொடுத்த பசு நான்; என்வாலை நீ பிடித்துக்கொள்ளு, உன்னைக் கரையேற்றுகிறேனென்று சொல்லிற்று. அவ்வாறே நான் வாலைப்பற்றிக்கொண்டேன். உடனேயந்த வைதரணி நதி குளிர்ந்து முழுங்காலளவானது. கரையேறினவுடனெமதூதர்களென்னை யெமன் முன்கொண்டுபோய் விட்டார்கள். எமன் என் பாவகர்மத்தைத் தெரிந்து, என்னை நரகத்திற் பதனம் பண்ணிவைக்கும்படி யெமதூதர்களுக் குத்திரவுபண்ணினான். அப்படியே யெமதூதர்கள் நரகத்திலிருத்தினார்கள். நானதிலொருவருஷமிருந்து வாதையடைந்தேன். ஒருவருஷமானபின் நரகம் சுவர்க்கலோகம் போலானதுமன்றி இந்தச் சரீரத்தையும் அடைந்தேன். அடைந்தவுடன் தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள் அப்பொழுது எமதூதர்களென்னருகில் வந்து நமஸ்காரஞ் செய்தெழுந்து, அஞ்சலிபத்தத்துடனின்று, பிராமணோத்தமனே! நீ தவசீலனுயினைப் உன்னை நரகத்தினின்றும் வெளிப்படுத்தி மரியாதையாகத தன்னிடமழைத்துவரும்படி யெமன் எங்களுக்குத்திரவுகொடுத்தார், ஆகையால்

வரவேண்டுமென்றார்கள். நானவர்களோடு எமனருகில் வந்தேன். வந்தவுடனே எமனென்னைக் கண்டெழுந்து அர்க்கிய பாத்தியம் ஆசமன முதலான உபசாரத்துடன் நமஸ்காரஞ்செய்து பிராமணோத்தமனே! உன் புத்திரன் தருமசேது உன்னஸ்திகளை யெடுத்துக்கொண்டு சேதுக்குப் போனவன் திருவையாற்றிலொருமாதம் வசித்தான் அங்கவன் வசித்த புண்ணியத்தால் நரகவாதை நீங்கிவிட்டது, இனிச் சிவலோகமடைவாயென்று சொல்லியதோடு, உன் புத்திரனுக்கு நடந்தயாவுஞ் சொல்லவும் வேண்டுமெனறான். அதைக் கேட்டு நானிங்கு வந்தேன். நீ சேதுக்குப் போகவேண்டியதில்லை, யென்னைச் சிவலோகத்துக் கனுப்பும்போது எமன் தன் தூதர்களை யழைத்து, வேறெங்கேயாவது மரித்தவர்கள் தலைமயிராவது, அல்லது சாமபலாவது திருவையாற்றில் இரண்டு கடிகையளவு தங்குமாயின் அவர்கள் சிவலோக பதவியை அடைவார்கள்; அவர்களிடத்தில் நீங்கள் போகக்கூடாதென்று உத்திரவு தந்தான். பார்வதிரூபத்தைப் பெற்ற உன தாயும் சிவரூபத்தைபபெற்ற நானும் தேவவிமானத்திலேறிச் சிவலோகம் போகின்றோம். நீ சுகமாக வாழக்கடவாயென்று ஆசீர்வதித்து மறைநதனன. தருமசேது நித்திரைதெளிநதெழுந் தாசசரியமடைந்து, காவேரிக்குப் போய் ஸ்நானம் பண்ணி நித்தியகருமங்களை முடிததுச சிவாலயமடைந்து, சிவதரிசனஞ்செய்து, அங்கெழுந்தருளியிருக்கின்ற மகரிஷிகளைக் கண்டு நமஸ்கரித்துத் தான் ராத்திரிக்கண்ட சொப்பனத்தைத் தெரிவித்தனன். அதைககேட்ட மகரிஷிகள் ஆச்சரியமடைநது உடனே அவன் தாய் தந்தையின் அஸதிவைக்கப்பட்டிருந்த பெட்டியைக் கொண்டுவரசசெய்து திறந்து பார்க்க அஸதிகளெல்லாம் சிவசொரூபமாகக் காணப்பட்டு அவாகள் பார்த்துக்கொண்டிருக்கும்போதே பெட்டியினின்று நீங்கி பஞ்சநதீசப்பெருமான் அருட்குறியாகிய சிவலிங்கத்தினிடத்தே ஐக்கியமாதலும் மகரிஷிகள் ஆச்சரியமடைந்து திருவருளை வியந்துகொண்டாட தருமசேதுவும் பேருவகையுற்று பஞ்சநதத்திற்றானே வானஞ்செய்துகொண்டிருந்தனன் ஏ அனவத்தியா! அறிந்துகொள்ளக் கடவாயென்று நாதசனமாவானவர் கூறி முடித்தலும் அனவத்தியாதேவியானவள் பின்னரும் அன்னவரை வணங்கி சுவாமின்! ஒருவன் மாபாபியாயிருப்பினும் அவன் மரணமடைந்தவுடன் அவன பத்தினி அவனோடுகூடவே அநுமரணஞ் செய்வாளாகில் அன்னவன் பாபத்தினின்று நீங்கி மேலான பதவியைப் பெறுவானென்று சாஸ்திரங்கள் விதித்திருக்க இத்தரும

நாசன் மாத்திரம் அவன் பத்தினி அநுமரணஞ் செய்திருந்து நரக வேதனையை அடைதற்கு காரணமென்ன அதனை யொருவாறு கூறி யருளல் வேண்டுமென்று விண்ணப்பித்துக்கொள்ள நாதசன்மா வானவர் ஏ அனவத்தியா! எனது விழியிற் கண்மணி! தருமநாசன் செய்துள்ள பாபத்துக்கு அளவிறந்த கற்பகோடி காலம கிடந்து வருந்தவேண்டியிருக்க அவன பத்தினியின அநுமரணமானது அக்கொடுமையை நீக்கி ஒரு வருஷம நரக வேதனையடையுமாறு செய்து சிவலோகத்தைத்தந்து மேன்மை பெறச் செய்தது. தெரிந்துகொள்ளக் கடவாயென்று கூறி முடித்தனர். ஏ மகரிஷிகாள் நன்குணரக் கடவீர்களென்று சூதபுராணிகர் அச்சரித்திரத்தை பூர்த்தி செய்து சில மிருகங்கள் உத்தமஜென்மத்தை அடைந்த சரித்திரத்தை கூறுவான் புகுந்தனர்.

௨௪-வது அத்தியாயம் முற்றிற்று.

---

## ௨௫-வது மிருகங்கள் உத்தம ஜென்மம் அடைந்த அத்தியாயம்.

---

ஓர் காலத்தில் ததீசி மகரிஷியானவர் கந்தமாதன பர்வதத்தினின்றும் புறப்பட்டு நூறுக்கோடி யோசனை செய்து பஞ்சநத க்ஷேத்திரத்தை நோக்கிவரும் மார்க்கத்தில் கழுதை, நாய், மான, முள்ளம் பன்றியாகிய நான்கு மிருகங்களும் கூட்டமாய்நின்று தங்கள் தங்கள் குறைகளை மனிதர் பேசுவதுபோற பேசிக்கொண்டு நிற்க மகரிஷியானவர் அதனைப் பார்த்து இவைகள் மிருகஜென்மமாக மனிதர்களை போலப் பேசிக்கொண்டிருக்கும் காரணமென்னை யென்று அவைகளருகிற் சென்று விசாரிக்க அம்மிருகம நான்கும் மகரிஷியின் பாதத்தில் வீழ்ந்து வணங்கி சுவாமினே! நாங்கள் பூர்வஜென்மத்திற் பிராமணர்களாகப் பிறந்து சகல சாஸ்திர பாண்டித்தியமுடையாராக விளங்கியும் குருமனைவியைப் புணர்ந்த பாபத்தால் நாய், ஜெனனத்தையும், பதிதப்பிராமணனுக்கு வேதாத்தியயனஞ் செய்து வைத்த பாபத்தால மான ஜெனனத்தையும், தாய் தந்தையரை அடித்து உபத்திரவஞ் செய்த பாபத்தால், முள்ளம்பன்றி ஜென்மத்தையும், சிவனடியாரை நிந்தித்த பாபத்தால் கழுதை ஜென்மத்தையும் அடைந்து ஏதோ புண்ணிய வசத்தால் மானிடவுருவுடன் சஞ்சரித்துக்கொண்டிருக்கின்றோம். ஏ மகாமூர்த்தியாகிய மகரிஷி; தேவரீரை யடியேங்கள் தரிசிக்கப் பெற்றமையால் இனியும் இம்மிருக

ஜென்மத்துடன் வருந்தாதிருக்க ஓர்வழி காட்டியருளல் வேண்டுமெ ன்று விண்ணபித்தனிற்க, அத்திமகரிஷியானவர் கிருபையோடு அவை களை உடன்கொண்டு திருவையாற்றையடைந்து அவைகளை கோபுர வாயின் அருகே நிறுத்தித்தான் காவேரிஸ்நானஞ் செய்து செம் பொற்சோதீஸ்வரரைத் தரிசித்து வந்து தன் கமண்டலத்தில் நிறைந்துள்ள காவேரி தீர்த்தத்தை ஸ்ரீ பஞ்சாக்ஷர மந்திர பூர்வ மாகப் புரோக்ஷிக்க நான்கு மிருகங்களும் தேவரூபத்துடன் சுவர்க்க லோகஞ்சென்று வாழ்ந்துகொண்டிருந்தன. மகரிஷிகாள்! மிருகங் களுக்கும் பஞ்சநதக்ஷேத்திரம் தேவலோக பதவியைக் கொடுத்த தென்னில், மானிடஜென்மமுடையார் நிறைந்த அறிவோடு எம்பெரு மானைப் பூஜித்து அத்தலத்தில் வாழ்வாராயின் அவர்களுடையும் பேற்றினை கூறவும்வேண்டுமோ அறிந்துகொள்ளக்கடவீர்களென்று சூதபுராணிகர் அச்சரித்திரத்தைப் பூர்த்திசெய்து, மகரிஷிகாள்! இப்பஞ்சநதக்ஷேத்திரத்தில் முத்தியடைந்தார் அளவை ஆதிசேஷ னாலும் கணித்துக் கூறுவது அரிதாகும். என் ஆசிரியர் கூறியவாறு இன்னும் எத்தனை கதைகள் கூறினும் அவைகள் யாவும் செம்பொற் சோதீஸ்வரப்பெருமான் அடியார்க்கருள்பாலித்த அற்புதத்தையும் அன்னவரருளால் அங்கு நாலுகலையுடன் வசிக்கும் காவேரியின் மேன்மையையே விளக்குமென முடித்து ஜெப்பியேசுரமான்மியம் உரைத்த சரித்திரத்தைக் கூறுவான் புகுந்தனர்.

உ௫-வது அத்தியாயம் முற்றிற்று.

## உ௬-வது ஜெப்பியேச்சுர மான்மியம் உரைத்த அத்தியாயம்.

---

நைமிசாரண்யவாசிகாள்! கேட்கக்கடவீர்கள் பஞ்சநதக்ஷேத் திரத்திற்கு ஜெப்பியேச்சுரமென்ற பெயர் வந்த காரணம் முன்னமே கூறியிருக்கின்றோம். அவைநிற்க, அவ்விடத்து அகஸ்தியமகரிஷி யானவர் பரம்பொருளைக்குறித்து தவம் செய்துகொண்டிருக்கவே சிவபெருமான் அன்னவர்க்குக் காக்ஷி தந்தருளி, அகஸ்தியா! உன க்கு வேண்டும் வரங்களைக் கேட்கக்கடவாயென்று திருவாய்மலர்ந் தருள அகஸ்தியரானவர் பரமன் பாதபதுமங்களில் வீழ்ந்து வண ங்கி சுவாமின்! அடியேற்கு தேவரீருடைய திருவடி தெரிசனையன்றி மற்றொன்றும் தோன்றாதிருக்கவும், வாமனரூபத்தோடு புத்திமுத்தி சாதனமாயுள்ள பக்தியையும் அளித்தருளவேண்டுமென்று கேட்

டுக்கொள்ள, சிவபெருமான் அகஸ்தியா! இந்த சூரிய புஷ்கரணி தீர்த்தத்தில் ஸ்நானம் செய்வாயேல் அவை கைகூடுமென்று மறைந் தருளினர். உடனே சிவாக்ஞையின்படி அத்தீர்த்தத்தில் மூழ்கவே தான் கைலாயசிகரத்தில் இருக்கக்கண்டு அத்யந்த சந்தோஷமுடை யவராய் சிவசந்நிதானஞ்சென்று பரம்பொருளை வணங்கி ஸ்தோத் திரஞ்செய்து நிற்க எம்பெருமான் அன்னவர்க்கு ஜீவன்முத்தி திசை யைக் கொடுத்தருளினர். அப்பொழுது அதனைத் தெரிசிக்கவேண்டி அளவிறந்த தேவர் முதலிய யாவரும் ஆங்கு வந்திருந்தமையால் வடதிசை தாழ்ந்து தென்றிசையுயர அதனைப் பரமசிவன் நோக்கி யருளி அகஸ்தியரை அருகழைத்து நீ பூமிசமத்வத்தை அடையத் தென்றிசை செல்வாயெனவே மகரிஷியானவர் சிவபெருமானைப் பின்னும் வணங்கி எம்பெருமானே! தென்னாடு தமிழ்ப்பாஷையால் மிகச் சிறப்புடைத்தாயிற்றே அதன் இலக்கணம் அறியாத யான் ஆங்கு எவ்வாறு செல்வேனென்று விண்ணப்பித்து நிற்க சிவபிரான தமிழிலக்கணத்தை உபதேசித்தருளி பொதிகாசலமடைந்திருக்கக் கடவாயென விடை கொடுத்தனுப்புதலும அதனைப் பெற்றுக்கொ ண்டு தென்றிசையை நோக்கி வரும்போது மார்க்கத்தில் அனேக ருக்கு இடையூறாயிருந்த விந்தபர்வதத்தைப் பூமியிலழுந்தச்செய்தும் இல்வலன், வாதாபி என்ற இருவரைகொன்றும, கானவித்தையில் நான் பெரியவன் நான் பெரியவனென்று விவாதப்பட்டுக்கொண்டிரு ந்த தும்புருநாரதரிருவரையும் அவர்கள் ஆங்குள்ள பளிங்குமலையில் வைத்திருந்த தாளம அம்மலையுருகிப் பிடித்துக்கொள்ளுமாறு இசை பாடி கர்வபங்கமபண்ணியும, பின்னர தாளத்தோடு அம்மலையைப் பெயர்த்து மதுரைமாநகரத்தில் சாரதாபீடமாக விளங்குமாறு நிறு வியும், திருக்குற்றாலமடைந்து ஆங்கு எழுந்தருளியிருந்த விஷ்ணு மூர்த்தியைத் தெரிசிக்கச்சென்றபோது ஆங்குள்ள வைஷ்ணவர்கள் மகரிஷியின் சிவவேடப்பொலிவைக் கண்டு பொறாது உட்செல்ல வொட்டாது தடுக்க வைஷ்ணவ வேஷத்துடன் உட்சென்று விஷ்ணு வடிவை பஞ்சாக்ஷர மந்திரபலத்தால் சிவலிங்கமாக்கி வைஷ்ணவர் களை அவ்வூரைவிட்டு ஓடுமாறு செய்தும், கடாசியாய் பொதிகாசல மடைந்து மாணக்கர் பன்னிருவர்க்கும் தமிழிலக்கணத்தைப் போதி த்து வீற்றிருந்தருளினர். மகரிஷிகாள் இவை நிற்க, சிவபெருமான் சைலாதிக்கு சாரூபபதவியும் சிவகணாதிபத்தியத்தையும் நந்திகேஸ் வரர் என்ற பெயரையும் கொடுத்தருளிய சரித்திரத்தை முன்னர் கூறியுள்ளோமல்லவா அதன் தொடர்ச்சி கூறுகின்றோம கேட்கக்கட

வீர்கள். பரமேஸ்வரன் நந்திகேஸவரருடன் கைலையங்கிரிக்குச்சென்ற வுடன் அன்னவர்க்கு சிவதீக்ஷை செய்து வீற்றிருந்தருள சனற்குமார மகரிஷி அதையறிந்தவராய் அங்கு வந்துசேர்ந்து ஈஸ்வரனைப் பன்முறை வழுத்தி எம்பெருமானே! அடியேற்கும் சிவதீக்ஷை செய்வித்தருளவேண்டுமென்று விண்ணப்பித்து நிற்க பரஞ்சுடர் நந்திகேஸ்வரரால் அன்னவர்க்கு சிவதீக்ஷை செய்வித்து ஏ சனற்குமரா! இன்று முதல் நீ நந்திகேஸ்வரனது மாணாக்கன் என்றழைக்கப் பெருவாய் உன்னிடம் செலலென ஆக்ஞாபித்தருளி உடனே நந்திகேஸ்வரருக்கு திருக்கல்யாணம் செய்துவைக்கவேண்டுமென்ற திருவுளங்கொண்டவராய் வசிஸ்ட மகரிஷியின் பௌத்திரியாகிய சுயசையை திருமழபாடி என்னும் க்ஷேத்திரத்தில் பங்குனிமாதம், சுக்கிலபக்ஷம், தசமி, புனர்பூசநக்ஷத்திரம்கூடிய சுபதினத்தில் மணம் புணர்வித்து உலகத்தவாக்கு கல்யாணமகோத்சவம் இங்ஙனம் கொண்டாடுதல் வேண்டுமெனத்தெரிவிப்பாபோன்று உமையம்மையார் சமேதமாய் மணமக்கள் இருவருடனும், சகல வாத்திய கோஷங்களுடனும் நந்திபிருங்கி முதலிய சிவகணநாதர்களும், சிவபக்தியில் சிறந்த அடியவர்கூட்டங்கள் சிவநாமசங்கீர்த்தனகோஷத்துடன் பின் தொடர்ந்து வரவும் கௌசிகாச்சிரமமாகிய திருப்பழனம், கௌதமாச்சிரமமாகிய திருச்சோற்றுத்துறை, வியாசராச்சிரமமாகிய திருவேதிகுடி, பசசிமத்திருச்சந்நிதியையுடைய திருக்கண்டியூர, திருப்பூந்துருத்தி, திருநெய்த்தானம் ஆகிய ஆறு திவ்ய க்ஷேத்திரங்களின் வழியாய் முறையே, ஆப்தசகாயேஸ்வரர், ஓதவனேஸ்வரர், வேதநாயகேஸவரா,வீரட்டேஸ்வரர், புஷ்பவனேஸவரர், கிருதத்தானேஸ்வரர், ஆகிய அறுவரும் எதிர்கொண்டழைத்து வழிவிட தீவர்த்தி மத்தாப்பு வாணவேடிக்கை முதலிய வைபவங்களுடன் உலாப் போந்து பஞ்சநதக்ஷேத்திரத்தில், எழுந்தருளினவராய் வீற்றிருந்தருளினர். மகரிஷிகாள்! இம்மகோத்சவத்தில் காவேரி ஸ்நானம் செய்து நியமம் உடையாராய் எம்பெருமானோடு தேவார திருவாசக பாராயணம் செய்துகொண்டு பிரதக்ஷணமாக வருவோர் இகத்தே புத்திரப்பேறு முதலிய சம்பத்தினையடைந்து மறுமையில் எம்பெருமான் சரண நீழலில் வாழும் பெரும் பேற்றினைப்பெற்றுய்வர் இது வேத சம்மதமாகும் அறிந்துகொள்ளக்கடவீர்கள். இது நிற்க நியமேசர் என்ற ஓர் யோகீஸ்வரர் சிவாலயத் திருப்பணி செய்துகொண்டு காவேரி நதியின் தென்கரையில் வசித்துக்கொண்டிருந்து சிலகாலஞ் சென்றபின் யோகத்திலமர்ந்து அளவிறந்த காலம் நிஷ்

டை கலைபாது நின்றுவிட்டுவே அன்னவர் வீற்றிருந்த பர்ணசாலையோடு பூமி ஓர் பனைமரப் பிரமாணம் உயர்ந்து மூடிக்கொண்டது. அவ்வாறாக அப்பொழுது அரசு செய்துகொண்டிருந்த அசிதபசியென்னும் சோழராஜனானவர் சதுரங்க சேனையுடன் திக்கு விஜயஞ்செய்து வரும்போது அவ்விடம் வந்தவுடன் ரதம் செல்லாது தடைபட ஆச்சரியமடைந்தவனாய் மிக உயர்ந்த அம்மேட்டைவெட்டிப்பரிசோதிக்கையில் யோகீஸ்வரரைக்கண்டு பயந்து சாஷ்டாங்கமாய் வீழ்ந்து பணிந்து நிற்க யோகீஸ்வரர் அன்னவனை வாழ்த்தி நீ எவ்விடஞ் செல்லினும் ஜெயப்பிரதாபத்தோடு வாழக்கடவாயென்று ஆசீர்வதித்து அனுப்பிவிட்டுப் பின்னரும் சிவத்தியானத்திலிருந்து பஞ்சநதேசப் பெருமான் திருவருளால் ரிஷபத்தின் திருப்பாதம்பதிந்த தான இடத்தும கருப்பஞ்சாறு, கற்கள், சுண்ணாம்பு, திரவியம், நான்கும் நிறைந்திருப்பதையறிந்து அவைகளால் பஞ்சநதேசப் பெருமான் வீற்றிருக்கும் சிவாலயத்திருப்பணி செய்து சிலகாலஞ் சென்றபின் ஈசனாரது சரணாரவிந்த நிழலைப் பெற்று வாழ்ந்திருந்தனர். மகரிஷிகாள்! அறிந்துகொள்ளக் கடவீர்களென்று சூதபுராணிகர் பஞ்சநதமான்மியத்தைப் பூர்த்தி செய்து முடிக்க மகரிஷிகள் அளவிறந்த மகிழ்ச்சியுடையராய்ச் சூதபுராணிகரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு பஞ்சநத க்ஷேத்திரம அடைந்து காவேரிஸ்நானம் ஈஸ்வர தெரிசனம பஞ்சாக்ஷர ஜெபம் முதலியவைகளைச் செய்து கொண்டு அத்தலத்திலேயே வசித்து சிவசாயுஜ்யத்தைப் பெற்று வாழ்ந்தனர்.

## பிரயோஜனம்.

*சீர்வளரையாறதனிடைவசித்துத்தேவதேவோத்தமன், அடியார்*
*கார்வளருள்ளக்கோவில்புக்குறைவோனை, நாரணனேரடியுகளைத்*
*தார்வளர்பதத்தன், சரணாம்புயந்தனைத்தண்ணளிக்காவிரிபடிந்து*
*ஏர்பெறவணங்குந்தன்மையரென்றுமின்பவீடடைந்துவாழ்குவரே.*

சிறப்புற்றோங்கும் பஞ்சநதக்ஷேத்திரத்தில் வசித்து காவேரிஸ்நானஞ் செய்து அறம்வளர்த்த நாயகியார் சமேதராய் யெழுந்தருளியிருக்கும் செம்பொற்சோதீசுவரப் பெருமான் பாதசேவைக்கு உரியவர் மேலான மோக்ஷவீட்டை அடைவர்.

பஞ்சநதமான்மியம் முற்றிற்று.



சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருஞானசம்பந்தசுவாமிகள் தேவாரம்.

## திருவையாறு - பண் - தக்கராகம்

திருச்சிற்றம்பலம்.

கலையார்மதியோடுரநீரும், நிலையார்சடையாரிடமாகும்
மலையாரமுதாமணிசந்தோ, டலையார்புனல்சேருமையாறே. (க)

மதியொன்றியகொன்றைவடத்தன், மதியொன்றவுதைத்தவர்வாழ்வு
மதியின்னொடுசேர்கொடிமாடம், மதியம்பயில்கின்றவையாறே. (உ)

கொக்கின்னிறகின்னொடுவன்னி, புக்கசடையார்க்கிடமாகும்
திக்கின்னிசைதேவர்வணங்கும், அக்கின்னரையாரதையாறே. (ங)

சிறைகொண்டபுரம்மவைசிந்தக், கறைகொண்டவர்காதல்செய்கோயில்
மறைகொண்டநல்வானவர்தம்மில், அறையும்மொலிசேருமையாறே. (ச)

உமையாளொருபாகமதாகச், சமைவாரவர்சார்விடமாகும்
அமையாருடல்சோர்தரமுத்தம், அமையாவருமந்தணையாறே. (ரு)

தலையின்றொடைமாலையணிந்து, கலைகொண்டதொர்கையினர்சேர்வாம்
நிலைகொண்டமனத்தவர்நித்தம், மலர்கொண்டுவணங்குமையாறே. ( )

வரமொன்றியமாமலரோன்றன், சிரமொன்றையறுத்தவர்சேர்வாம்
வரையின்னருவித்திரள்பாய, அரவங்கொடுசேருமையாறே. (எ)

வரையொன்றதெடுத்தவரக்கன், சிரமங்கநெரித்தவர்சேர்வாம்
விரையின்மலர்மேதகுபொன்னித், திரைதன்னொடுசேருமையாறே ( )

சங்கக்கயனுமறியாமைப், பொங்குஞ்சுடரானவர்கோயில்
கொங்கிற்பொலியும்புனல்கொண்டு, அங்கிக்கெதிர்காட்டுமையாறே.

துவராடையர்தோலுடையார்கள், கவர்வாய்மொழிகாதல்செய்யாதே
தவராசர்கள்தாமரையானோ, டவர்தாமணையந்தணையாறே. (ய)

கலையார்கலிக்காழியர்மன்னன், நலமார்தருஞானசம்பந்தன்
னலையார்புனலாருமையாறனைச, சொன்மாலைவல்லார்துயர்விடே. ()

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - செம்பொற்சோதீஸ்வரர், தேவியார் - அறம்வளர்த்தநாயகியம்மை.

---

## திருவையாறு திருவிராகம் - பண்-வியாழக்குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

பணிந்தவரருவினைபற்றறுத்தருள்செயத்
துணிந்தவன்றோலொடுநூறுதைமார்பினிற்
பிணிந்தவனரவொடுபேரெழிலாமைகொண்
டணிந்தவன்வளநகரந்தணையாறே. (௧)

கீர்த்திமிக்கவனகர்கிளரொளியுடனடப்
பார்த்தவன்பனிமதிபடர்சடைவைத்துப்
போர்த்தவன்கரியுரிபுலியதளாவரை
யார்த்தவன்வளநகரந்தணையாறே. (௨)

வரிந்தவெஞ்சிலைபிடித்தவுணர்தம்வளநக
ரெரிந்தறவெய்தவன்னெழில்திகழ்மலர்மே
லிருந்தவன்சிரமதிலிரந்தவர்க்குறைகொள
வரிந்தவன்வளநகரந்தணையாறே. (௩)

வாய்ந்தவல்லவுணர்தம்வளநகரெரியிடை
மாய்ந்தறவெய்தவன்வளர்பிறைவிரிபுன
றோய்ந்தெழுசடையினன்றொன்மறையாறங்க
மாய்ந்தவன்வளநகரந்தணையாறே. (௪)

வானமர்மதிபுல்குசடையிடையரவொடு
தேனமர்கொன்றையன்றிகழ்தருமார்பினன்
மானனமென்விழிமங்கையோர்பாகமு
மானவன்வளநகரந்தணையாறே. (௫)

முன்பனைமுனிவரோடமரர்கடொழுதெழு
பின்பனையிணையிலவினையவனையெழில்திக
ழென்பொனையேதமில்வேதியர்தாந்தொழு
மன்பனன்வளநகரந்தணையாறே. (௬)

வல்லியலவுணர்தம்மனைநகரெரியிடை
வெந்தறவெய்தவன்விளங்கியமார்பினிற்
பந்தமாமெல்விரல்பாகமதாகித்த
னந்தமில்வளநகரந்தணையாறே. (௭)

விடைத்தவல்லரக்கனல்வெற்பினையெடுத்தலு
மடித்தலத்தாலிறையூன்றிமற்றவனது
முடித்தலைத்தோளவைநெரிதரமுறைமுறை
யடர்த்தவன்வளநகரந்தணையாறே. (௮)

விண்ணவர்தம்மொடுவெங்கதிரோனொடு
மெண்ணிலிதேவர்களிந்திரன்வழிபடக்
கண்ணனுமபிரமனுங்காண்பரிதாகிய
வண்ணறன்வளநகரந்தணையாறே. (௯)

மருளுடைமனத்துவன்சமணர்கண்மாசறு
மிருளுடையிணைத்துவர்ப்போர்வையினார்களுந்
தெருளுடைமனத்தவர்க்கேறன்பினாரணா
வருளுடையடிகடமந்தணையாறே. (௰)

நலமலிஞானசம்பந்தனதின்றமி
ழலைமலிபுனன்மலருமந்தணையாற்றினைக்
கலைமலிதமிழிவைகற்றுவல்லார்மிக
நலமலிபுகழ்மிகுநன்மையர்தாமே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவையாறு - பண் - மேகராகக் குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்.

புலனைந்தும்பொறிகலங்கிநெறிமயங்கியறிவழிந்திட்டைமேலுந்தி
யலமந்தபோதாகவஞ்சேலென்றருள்செயவானமருங்கோயில
வலம்வந்தமடவார்கணடமாடமுழவதிரமழையென்றஞ்சிச
சிலமந்தியலமந்துமரமேறிமுகில்பார்க்குந்திருவையாறே. (௧)

விடலேறுபடநாகமரைக்கசைத்தவெற்பரையன்பாவையோடு
மடலேறொன்றதுவேறியஞ்சொலீர்பலியென்னுமடிகள்கோயில்
கடலேறித்திரைமோதிக்காவிரியினுடன்வந்துகங்குல்வைகித்
திடலேறிச்சுரிசங்கஞ்செழுமுத்தங்கீன்றலைக்குந்திருவையாறே (௨)

ஓதியாருமறிவாரிலையோதியுலகெலாஞ்
சோதியாய்நிறைந்தான்சுடர்ச்சோதியுட்சோதியான்
வேதியாகிவிண்ணாகிமண்ணோடெரிகாற்றுமா
யாதியாகிநின்றானுமையாறுடையையனே. (௭)

குறவனாண்மலர்கொண்டடியார்வழிபாடுசெய்
விரவுநீறணிவார்சிலதொண்டர்வியப்பவே
பரவநாடொறும்பாடநம்பாவம்பறைதலா
லரவமார்த்துகந்தானுமையாறுடையையனே (௮)

உரைசெய்தொல்வழிசெய்தறியாவிலங்கைக்குமன்
வரைசெய்தோளடர்த்துமதியஞ்சடைவைத்தவன்
கரைசெய்காவிரியின்வடபாலதுகாதலா
னரைசெய்மேகலையானுமையாறுடையையனே (௯)

மாலுஞ்சோதிமலரானுமறிகிலாவாய்மையான்
காலங்காம்புவயிரங்கடிகையன்பொற்கழல
கோலமாய்க்கொழுந்தீனறுபவளந்திரண்டதோ
ராலநீழலுளானுமையாறுடையையனே. (௰)

கையிலுண்டுழல்வாருங்கமழ்துவராடையான
மெய்யைப்போர்த்துழல்வாருமுரைப்பனமெய்யல
மைகொள்கண்டத்தெண்டோண்முக்கணான்கழல்வாழ்த்தவே
யையந்தேர்ந்தளிப்பானுமையாறுடையையனே. (௰௧)

பலிதிரிந்துழல்பண்டங்கன்மேயவையாற்றினைக்
கலிகடந்தகையார்கடற்காழியர்காவல
னொலிகொள்சம்பந்தனொண்டமிழ்பத்தும்வல்லார்கள்போய்
மலிகொள்விண்ணிடைமன்னியசீர்பெறுவார்களே. (௰௨)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவையாறு திருவிராகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

திருத்திகழ்மலைச்சிறுமியோடுமிகுதேசர்
உருத்திகழெழிற்கயிலைவெற்பிலுறைதற்கே
விருப்புடையவற்புதரிருக்குமிடமேரார்
மருத்திகழ்பொழிற்குலவுவண்டிருவையாறே. (௧)

கந்தமரமுந்துபுகையுந்தவிசில்விளக்கே
ரிந்திரனுணர்ந்துபணியெந்தையிடமெங்குஞ்
சந்தமலியுந்தருமிடைந்தபொழில்சார
வந்தவளிநந்தணவுவண்டிருவையாறே. (௨)

கட்டுவடமெட்டுமுறுவட்டமுழவத்திற்
கொட்டுகரமிட்டவொலிதட்டும்வகைநந்திக்
கிட்டமிகநட்டமவையிட்டவரிடஞ்சீர்
வட்டமதிலுட்டிகழுமவண்டிருவையாறே. (௩)

நண்ணியோர்வடத்தினிழலால்வர்முனிவர்க்கன்
றெண்ணிலிமறைப்பொருள்விரித்தவரிடஞ்சீர்த்
தண்ணின்மலிசந்தகிலொடுந்திவருபொன்னி
மண்ணினைமிசைவந்தணவுவண்டிருவையாறே. (௪)

வென்றிமிகுதாருகனதாருயிர்மடங்கக்
கன்றிவருகோபமிகுகாளிகதமோவ
நின்றுநடமாடியிடநீடுமலர்மேலா
மன்றன்மலியும்பொழில்கொளவண்டிருவையாறே. (௫)

பூதமொடுபேய்கள்பலபாடநடமாடிப்
பாதமுதல்பையரவுகொண்டணிபெறுத்திக்
கோதையரிடும்பலிகொளும்பரனிடம்பூ
மாதவிமணங்கமழுவண்டிருவையாறே. (௬)

துன்னுகுழல்மங்கையுமைநங்கைசுளிவெய்தப்
பின்னொருதவஞ்செய்துழல்பிஞ்ஞகனுமங்கே
யென்னசதியென்றுரைசெயங்கணனிடஞ்சீர்
மன்னுகொடையாளர்பயில்வண்டிருவையாறே. (௭)

இரக்கமில்குணத்தொடுலகெங்குநலிவெம்போ
ரரக்கன்முடிபத்தலைபுயத்தொடுமடங்கத்
துரக்கவிரலிற்சிறிதுவைத்தவரிடஞ்சீர்
வரக்கருணையாளர்பயில்வண்டிருவையாறே. (௮)

பருத்துருவதாகிவிண்ணடைந்தவனோர்பன்றிப்
பெருத்துருவதாயுலகிடந்தவனுமென்றுங்
கருத்துருவொணாவகைநிமிர்ந்தவனிடங்கார்
வருத்துவகைதீர்கொள்பொழில்வண்டிருவையாறே. (௯)

பாக்கியமதொன்றுமில்சமண்பதகர்புத்தர்
சாக்கியர்களென்றுடல்பொர்த்துதிரிவார்தா
நோக்கரியதத்துவனிடம்படியின்மேலால்
மாக்கமுறநீடுபொழில்வண்டிருவையாறே. (௰)

வாசமலியும்பொழில்கொள்வண்டிருவையாற்
றீசனையெழிற்புகலிமன்னவன்மெய்ஞ்ஞானப்
பூசுரனுரைத்ததமிழ்பத்துமிவைவல்லார்
நேசமலிபத்தரவர்நின்மலனடிக்கே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரம்.

---

## திருவையாறு-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மாதர்ப்பிறைக்கண்ணியானைமலையான்மகளொடும்பாடிப்
போதொடுநீர்சுமந்தேத்திப்புகுவாரவர்பின்புகுவேன்
யாதுஞ்சுவடுபடாமலையாறடைகின்றபோது
காதன்மடப்பிடியோடுங்களிறுவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (௧)

போழிளங்கண்ணியினானைப்பூந்துகிலாளொடும்பாடி
வாழியம்போற்றியென்றேத்திவட்டமிட்டாடாவருவே
னாழிவலவனின்றேத்துமையாறடைகின்றபோது
கோழிபெடையொடுங்கூடிக்குளிர்ந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (௨)

எரிப்பிறைக்கண்ணியினானையேந்திழையாளொடும்பாடி
முரித்தவிலயங்களிட்டுமுகமலர்ந்தாடாவருவே
னரித்தொழுகும்வெள்ளருவியையாறடைகின்றபோது
வரிக்குயில்பேடையோடாடிவைகிவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (௩)

பிறையிளங்கண்ணியினானைப்பெய்வளையாளொடும்பாடித்
துறையிளம்பன்மலர்தூவித்தோளைக்குளிரத்தொழுவே
னறையிளம்பூங்குயிலாலுமையாறடைகின்றபோது
சிறையிளம்பேடையொடாடிச்சேவல்வருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (ச)

ஏடுமதிக்கண்ணியானையேந்திழையாளொடும்பாடிக்
காடொடுநாடுமலையுங்கைதொழுதாடாவருவே
னாடலமர்ந்துறைகின்றவையாறடைகின்றபோது
பேடைமயிலொடுங்கூடிப்பிணைந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (ரு)

தண்மதிக்கண்ணியினானைத்தையனல்லாளொடும்பாடி
உண்மெலிசிந்தையனாகியுணராவுருகாவருவே
னண்ணலமர்ந்துறைகின்றவையாறடைகின்றபோது
வண்ணப்பகன்றிலொடாடிவைகிவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (சா)

கடிமதிக்கண்ணியினானைக்காரிகையாளொடும்பாடி
வடிவொடுவண்ணமிரண்டும்வாய்வேண்டுவசொல்லிவாழ்வே
னடியிணையார்க்குங்கழலானையாறடைகின்றபோது
இடிகுரலன்னதோரேனமிசைந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (எ)

விரும்புமதிக்கண்ணியானைமெல்லியலாளொடும்பாடிப்
பெரும்புலர்காலையெழுந்துபெறுமலர்கொய்யாவருவே
னருங்கலப்பொன்மணியுந்துமையாறடைகின்றபோது
கருங்கலைப்பேடையொடாடிக்கலந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (அ)

முற்பிறைக்கண்ணியினானைமொய்குழலாளொடும்பாடிப்
பற்றிக்கயிறறுக்கில்லேன்பாடியுமாடாவருவே
னற்றருள்பெற்றுநின்றாரோடையாறடைகின்றபோது
நற்றுணைப்பேடையொடாடிநாரைவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (கூ)

திங்கள்மதிக்கண்ணியானைத்தேமொழியாளொடும்பாடி
யெங்கருணல்குங்கொலெந்தையெனக்கினியென்னாவருவே

ணங்கிளமங்கையொடுமையாறடைகின்றபோது
பைங்கிளிபேடையோடாடிப்பறந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (௰)

வளர்மதிக்கண்ணியினானைவார்குழலாளொடும்பாடிக்
களவுபடாததோர்காலங்காண்பான்கடைக்கணிக்கின்றே
னளவுபடாததோரன்போடையாறடைகின்றபோது
இளமணநாகுதழுவியேறுவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (௰௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவையாறு - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

கங்கையைச்சடையுள்வைத்தார்கதிர்ப்பொறியரவும்வைத்தார்
திங்களைத்திகழவைத்தார்திசைதிசைதொழவும்வைத்தார்
மங்கையைப்பாகம்வைத்தார்மான்மறிமழுவும்வைத்தா
ரங்கையுளனலும்வைத்தாரையனையாறனாரே. (௧)

பொடிதனைப்பூசவைத்தார்பொங்குவெண்ணூலும்வைத்தார்
கடியதோர்நாகம்வைத்தார்காலனைக்காலில்வைத்தார்
வடிவுடைமங்கைதன்னைமார்பிலோர்பாகம்வைத்தா
ரடியிணைதொழவும்வைத்தாரையனையாறனாரே. (௨)

உடைதருகீளும்வைத்தாருலகங்களனைத்தும்வைத்தார்
படைதருமழுவும்வைத்தார்பாய்புலித்தோலும்வைத்தார்
விடைதருகொடியும்வைத்தார்வெண்புரிநூலும்வைத்தா
ரடைதரவருளும்வைத்தாரையனையாறனாரே. (௩)

தொண்டர்கள்தொழவும்வைத்தார்தூமதிசடையில்வைத்தா
ரிண்டையைத்திகழவைத்தாரெமக்கென்றுமின்பம்வைத்தார்
வண்டுசேர்குழலினாளைமருவியோர்பாகம்வைத்தா
ரண்டவானவர்களேத்துமையனையாறனாரே. (௪)

வானவர்வணங்கவைத்தார்வல்வினைமாயவைத்தார்
கானிடைநடமும்வைத்தார்காமனைக்கனலாவைத்தா
ரானிடையைந்தும்வைத்தாராட்டுவார்க்கருளும்வைத்தா
ரானையினுரிவைவைத்தாரையனையாறனாரே. (௫)

சங்கணிகுழையும்வைத்தார்சாம்பல்மெய்ப்பூசவைத்தார்
வெங்கதிரெரியவைத்தார்விரிபொழிலனைத்தும்வைத்தார்
கங்குலும்பகலும்வைத்தார்கடுவினைகளையவைத்தா
ரங்கமேதோதவைத்தாரையனையாறனாரே. (௬)

பத்தர்கட்கருளும்வைத்தார்பாய்விடையேறவைத்தார்
சித்தத்தையொன்றவைத்தார்சிவமதேநினையவைத்தார்
முத்தியைமுற்றவைத்தார்முறைமுறைநெறிகள்வைத்தா
ரத்தியினுரிவைவைத்தாரையனையாறனாரே. (௭)

ஏறுகந்தேறவைத்தாரிடைமருதிடமும்வைத்தார்
நாறுபூங்கொன்றைவைத்தார்நாகமுமரையில்வைத்தார்
கூறுமைபாகம்வைத்தார்கொல்புலித்தோலும்வைத்தா
ராறுமோர்சடையில்வைத்தாரையனையாறனாரே. (௮)

பூதங்கள்பலவும்வைத்தார்பொங்குவெண்ணீறும்வைத்தார்
கீதங்கள்பாடவைத்தார்கின்னரந்தன்னைவைத்தார்
பாதங்கள்பரவவைத்தார்பத்தர்கள்பணியவைத்தா
ராதியுமந்தம்வைத்தாரையனையாறனாரே. (௯)

இரப்பவர்க்கீயவைத்தாரீபவர்க்கருளும்வைத்தார்
கரப்பவர்தங்கட்கெல்லாங்கடுநரகங்கள்வைத்தார்
பரப்புநீர்கங்கைதன்னைப்படர்சடைப்பாகம்வைத்தா
ரரக்கனுக்கருளும்வைத்தாரையனையாறனாரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவையாறு—பண்—திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

குண்டனாய்ச்சமணரோடேகூடிநான்கொண்டமாலைத்
துண்டனேசுடர்கொள்சோதிதூநெறியாகிநின்ற
அண்டனேயமரரேறேதிருவையாறமர்ந்ததேனே
தொண்டனேன்றொழுதுன்பாதஞ்சொல்லிநான்றிரிகின்றேனே. (௧)

பீலிகையிடுக்கிநாளும்பெரியதோர்தவமென்றெண்ணி
வாலியதறிகள்போலமதியிலார்பட்டதென்னே
வாலியார்வணங்கியேத்துந்திருவையாறமர்ந்ததேனோ
டாலியாவெழுந்தநெஞ்சமழகிதாவெழுந்தவாறே. (௨)

கட்டிடுஞ்சமணரோடேகருக்கிநாளறவமென்றெண்ணி
யொட்டிடுமனத்தினீரேயுமமையானசெய்வதென்னே
மொட்டிடுகமலப்பொய்கைத்திருவையாறமர்ந்ததேனோ
டொட்டிடுமுள்ளத்தீரேயுமமைநானுகந்திட்டனே. (௩)

பாசிப்பனமாசுமெய்யாபலமிலாச்சமணரோடு
நேசத்தாலிருந்தநெஞ்சைநீக்குமாறறியமாட்டேன்
தேசத்தார்பரவியேத்துந்திருவையாறமர்ந்ததேனை
வாசத்தால்வணங்கவல்லார்வல்வினைமாயுமன்றே. (௪)

கடுப்பொடியட்டிமெய்யிற்கருதியோர்தவமென்றெண்ணி
வடுக்களோடிசைந்தநெஞ்சேமதியிலிபட்டதென்னே
மடுக்களில்வாளைபாயுந்திருவையாறமர்ந்ததேனை
யடுத்துநின்றுன்னுநெஞ்சேயருந்தவஞ்செய்தவாறே. (௫)

அறவியென்றவமேதோரேன்சொல்லியசெலவுசெய்து
உறவினாலமணரோடுமுணாவிலேனுணாவொன்றின்றி
நறவமார்பொழில்கள்சூழ்ந்ததிருவையாறமர்ந்ததேனை
மறவிலாநெஞ்சமேநலமதியுனக்கடைந்தவாறே. (௬)

பல்லுரைச்சமணரோடேபலபலகாலமெல்லாஞ்
சொல்லியசெலவுசெய்தேன்சோர்வனினினைந்தபோது
மல்லிகைமலருஞ்சோலைத்திருவையாறமர்ந்ததேனை
யெல்லியும்பகலுமெல்லாநினைந்தபோதினியவாறே. (௭)

மண்ணுளாரவிண்ணுளாருமவணங்குவார்பாவம்போக
எண்ணிலாச்சமணரோடேயிசைந்தனையேழைநெஞ்சே
தெண்ணிலாவெறிக்குஞ்சென்னித்திருவையாறமர்ந்ததேனைக்
கண்ணினாற்காணப்பெறறுக்கருதிற்றேமுடிந்தவாறே. (௮)

குருந்தமதொசித்தமாலுங்குலமலர்மேவினானுந்
திருந்துநற்பாதத்தோடுதிருமுடிகாணமாட்டா
ரருந்தவமுனிவரேத்துந்திருவையாறமர்ந்ததேனைப்
பொருந்திநின்றுன்னுநெஞ்சேபொய்வினைமாயுமன்றே. (௯)

அறிவிலாவரக்கனோடியருவரையெடுக்கலுற்று
முறுகினான்முறுகக்கண்டுமூதறிவாளனோக்கி
நிறுவினான்விரலதொன்றால்நெரிந்துபோய்நிலத்தில்வீழ்
வறிவினாலருள்கள்செய்தான்றிருவையாறமர்ந்ததேனே. (௰)

திருச்சிற்றம்பலம்.

## திருவையாறு—பண்—திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

தானலாதுலகமில்லைசகமலாதடிமையில்லை
கானலாதாடலில்லைக்கருதுவார்தங்களுக்கு
வானலாதருளுமில்லைவார்குழன்மங்கையோடு
மானலாதூர்வதில்லையையனையாறனார்க்கே. (௧)

ஆலலாவிருக்கையில்லையருந்தவமுனிவர்க்கன்று
நூலலாநொடிவதில்லைநுண்பொருளாய்ந்துகொண்டு
மாலுநான்முகனுங்கூடிமலரடிவணங்கவேலை
யாலலாலமுதமில்லையையனையாறனார்க்கே. (௨)

கரிபுரிசுடலைதன்னினடமலானவிற்றலில்லை
சுரிபுரிகுழலியோடுந்துணையலாவிருக்கையில்லைத்
தெரிபுரிசிந்தையார்க்குத்தெளிவலாலருளுமில்லை
யரிபுரிமலர்கொண்டேத்துமையனையாறனார்க்கே. (௩)

தொண்டலாற்றுணையுமில்லைதோலலாதுடையுமில்லைக்
கண்டலாதருளுமில்லைக்கலந்தபின்பிரிவதில்லை
பண்டைநான்மறைகள்காணாப்பரிசினனென்றென்றெண்ணி
யண்டவானவர்களேத்துமையனையாறனார்க்கே. (௪)

எரியலாலுருவமில்லையேறலாலேறலில்லை
கரியலாற்போர்வையில்லைக்காண்டகுசோதியார்க்குப்
பிரிவிலாவமரர்கூடிப்பெருந்தகைப்பிரானென்றேத்து
மரியலாற்றேவியில்லையையனையாறனார்க்கே. (௫)

என்பலாற்கலனுமில்லையெருதலாலூர்வதில்லைப்
புன்புலானாறுகாட்டிற்பொடியலாற்சாந்துமில்லைத்
துன்பிலாத்தொண்டர்கூடித்தொழுதழுதாடிப்பாடு
மன்பலாற்பொருளுமில்லையையனையாறனார்க்கே. (௬)

கீளலாலுடையுமில்லைக்கிளர்பொறியரவம்பைம்பூண்
டோளலாற்றுணையுமில்லைத்தொத்தலர்கின்றவேனில்
வேளலாற்காயப்பட்டவீரருமில்லைமீளா
வாளலாற்கைம்மாறில்லையையனையாறனார்க்கே. (௭)

சகமலா தடிமையில்லைத் தானலாற் றுணையுமில்லை
நகமெலாந் தேயக்கையா னாண்மலர் தொழுது தூவி
முகமெலாங் கண்ணீர் மல்கமுன் பணிந் தேத்துந் தொண்ட
ரகமலாற் கோயிலில்லை யையனை யாறனார்க்கே. (அ)

உமையலா துருவமில்லை யுலகலா துடையதில்லை
நமையெலா முடையராவா நன்மையே தீமையில்லைக்
கமையெலா முடையராகிக் கழலடி பரவுந் தொண்டர்க
கமைவிலா வருள்கொடுப்பா ரையனை யாறனார்க்கே. (௯)

மலையலா விருக்கையில்லை மதித்திடா வரக்கன் றன்னைத்
தலையலா னெரித்ததில்லைத் தடவரைக் கீழடர்த்து
நிலையிலார் புரங்கள் வேவ நெருப்பலால் விரித்ததில்லை
யலையினார் பொன்னிமன்னு மையனை யாறனார்க்கே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவையாறு - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

குறுவித்தவா குற்றநோய்வினை காட்டிக் குறுவித்தநோ
யுறுவித்தவா வுற்றநோய்வினை தீர்ப்பானுகந் தருளி
யறிவித்தவா றடியேனையையா றனடிமைக்களே
செறிவித்தவா தொண்டனேனைத் தன் பொன்னடிக் கீழெனையே. (க)

கூர்வித்தவா குற்றநோய்வினை காட்டியுங் கூர்வித்தநோ
யூர்வித்தவா வுற்றநோய்வினை தீர்ப்பானுகந் தருளி
யார்வித்தவா றடியேனையையா றனடிமைக்களே
சேர்வித்தவா தொண்டனேனைத் தன் பொன்னடிக் கீழெனையே. (உ)

தாக்கினவா சலமேவினை காட்டியுந் தண்டித்தநோய்
நீக்கினவா நெடுநீரினின் றேற்றி நினைந் தருளி
யாக்கினவா றடியேனையையா றனடிமைக்களே
நோக்கினவா தொண்டனேனைத் தன் பொன்னடிக் கீழெனையே. (௩)

தருக்கினகான் றகவின்றிடு மோடச்சலமதனை
னெருக்கினவா நெடுநீரினின் றேற்றி நினைந் தருளி
யருக்கினவா றடியேனையையா றனடிமைக்களே
பெருக்கினவா தொண்டனேனைத் தன் பொன்னடிக் கீழெனையே. (௪)

இழிவித்தவா றிட்டநோய்வினை காட்டிப்பிடாப்படுத்துக்
கழிவித்தவா கட்டநோய்வினை தீர்ப்பான் கலந்தருளி
யழிவித்தவா றடியேனையை யாறனடிமைக்கே
தொழுவித்தவா தொண்டனேனைத் தன் பொன்னடிக்கீழெனையே. (௫)

இடைவித்தவா றிட்டநோய்வினை காட்டிப்பிடாப்படுத்து
வுடைவித்தவா றுற்றநோய்வினை தீர்ப்பா னுகந்தருளி
யடைவித்தவா றடியேனையை யாறனடிமைக்கே
தொடர்வித்தவா தொண்டனேனைத் தன் பொன்னடிக்கீழெனையே (௬)

படக்கினவா படநின் றன்பன் ஞளும படக்கினநோ
யடக்கினவா றதுவன் றியுந் தீவினை பாவமெல்லா
மடக்கினவா றடியேனையை யாறனடிமைக்கே
துடக்கினவா தொண்டனேனைத் தன பொன்னடிக்கீழெனையே. (௭)

மறப்பித்தவா வல்லைநோய்வினை காட்டி மறப்பித்தநோய்
துறப்பித்தவா துக்கநோய்வினை தீர்ப்பா னுகந்தருளி
பிறப்பித்தவா றடியேனையை யாறனடிமைக்கே
சிறப்பித்தவா தொண்டனேனைத் தன பொன்னடிக்கீழெனையே. (௮)

துயக்கினவா துக்கநோய்வினை காட்டித் துயக்கியநோ
யியக்கினவா றிட்டநோய்வினை தீர்ப்பா னிசைந்தருளி
பயக்கினவா றடியேனையை யாறனடிமைக்கே
மயக்கினவா தொண்டனேனைத் தன் பொன்னடிக்கீழெனையே. (௯)

கறுத்துமிட்டார் கண்டங் கங்கை சடைமேற் கரந்தருளி
யிறுத்துமிட்டா ரிலங்கைக்கிறைதனை யிருபதுதோ
ளறுத்துமிட்டா ரடியேனையை யாறனடிமைக்கே
பொறுத்துமிட்டா தொண்டனேனைத் தன் பொன்னடிக்கீழெனையே. ()

திருச்சிற்றம்பலம்.

---

## திருவையாறு பண்-பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்.

விட்கிலேனடி நாயேன் வேண்டியக்காலியா தொன்று
மிடைகிலேனமணர்கள் தமறவுரை கேட்டலமந்தேன்
றொடர்கின்றேனுன்னுடைய தூமலர்ச் சேவடி காண்பா
ணைடைகின்றேனை யாறற்காளாய் நானுய்ந்தேனே. (௧)

செம்பவளத்திருவுருவர்திகழ்சோதிக்குழைக்காதர்
கொம்பமருங்கொடிமருங்கிற்கோலவளையாளொருபாகர்
வம்பவிழுமலர்க்கொன்றைவளர்சடைமேல்வைத்துகந்த
அம்பவளனையையாறற்காளாய்நானுய்ந்தேனே. (௨)

நணியானைசேயானைநம்பானைசெம்பொன்னின்
றுணியானைத்தோலானைச்சுண்ணவெண்ணீற்றானை
மணியானைவானவர்க்குமருந்தாகிப்பிணிதீர்க்கும
அணியானையையாறற்காளாய்நானுய்ந்தேனே. (௩)

ஊழித்தீயாய்நின்றாயுள்குவாருள்ளத்தாய்
வாழித்தீயாய்நின்றாய்வாழ்த்துவார்வாயானை
பாழித்தீயாய்நின்றாய்படர்சடைமேற்பனிமதிய
மாழித்தீயையையாறற்காளாய்நானுய்ந்தேனே. (௪)

சடையானைசடையிடையேதவழுந்தண்மதியானை
விடையானைவிடையேறிப்புரமெரித்தவித்தகனை
யுடையானையுடைதலைகொண்டேறின்பலிக்குழலு
மடையானையையாறற்காளாய்நானுய்ந்தேனே. (௫)

நீரானைதீயானைநெதியானைகதியானை
யூரானையுலகானையுடலானையுயிரானை
பேரானைபிறைசூடிபிணிதீர்க்குமபெருமானென்
றூராதவையாறற்காளாய்நானுய்ந்தேனே. (௬)

கண்ணானைமணியானைக்கருத்தானைஅருத்தனை
யெண்ணானையெழுத்தானையெழுத்தினுக்கோரியல்பானை
விண்ணானைவிண்ணிடையேபுரமெரித்தவேதியனை
யண்ணானையையாறற்காளாய்நானுய்ந்தேனே. (௭)

மின்னானையுருமானைவேதத்தின்பொருளானை
பொன்னானைமணியானைபொருகடல்வாயமுதானை
நின்னானிருவர்க்குங்காண்பரியநிமிர்சோதி
யன்னானையையாறற்காளாய்நானுய்ந்தேனே. (௮)

முத்திசையும்புனற்பொன்னிமொய்பவளங்கொழித்துந்தப்
பத்தர்பலர்நீர்மூழ்கிப்பலகாலும்பணிந்தேத்த
வெத்திசையும்வானவர்களெம்பெருமானெனவிறைஞ்சும்
அத்திசையாமையாறற்காளாய்நானுய்ந்தேனே. (௯)

கருவரைசூழ்கடலிலங்கைக்கோமானைக்கருத்தழியத்
திருவிரலாலுதகரணஞ்செய்துகந்தசிவமூர்த்தி
பெருவரைசூழ்வையகத்தார்பேர்நந்தியென்றேத்து
மருவரைசூழையாறற்காளாய்நானுய்ந்தேனே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவையாறு - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சிந்திப்பரியனசிந்திப்பவர்க்குச்சிறந்துசெந்தேன்
முந்திப்பொழிவனமுத்திகொடுப்பனமொய்த்திருண்டு
பந்தித்துநின்றபழவினைதீர்ப்பனபாம்புசுற்றி
யந்திப்பிறையணிந்தாடுமையாறனடித்தலமே. (௧)

இழித்தனவேழேழ்பிறப்புமறுத்தனவென்மனத்தே
பொழித்தனபோரெழிற்கூற்றையுதைத்தனபோற்றவர்க்காய்க்
கிழித்தனதக்கன்கிளரொளிவேள்வியைக்கீழ்முனைசென்று
அழித்தனவாறங்கமானவையாறனடித்தலமே. (௨)

மணிநிறமொப்பனபொன்னிறமன்னினமின்னிலவாய்க்
கணிநிறமன்னகயிலைப்பொருப்பனகாதல்செய்யத்
துணிமனசீலத்தராகித்தொடர்ந்துவிடாதகொண்டர்க்
கணியனசேயனதேவர்க்கையாறனடித்தலமே. (௩)

இருடருதுன்பப்படலமறைப்பமெய்ஞ்ஞானமென்னும்
பொருடருகண்ணிழந்துண்பொருணாடிப்புகலிழந்த
குருடருந்தம்மைப்பரவக்கொடுநரகக்குழிநின்
றருடருகைகொடுத்தேற்றுமையாறனடித்தலமே. (௪)

எழுவாயிறுவாயிலாதனவெங்கள்பிணிதவிர்த்து
வழுவாமருத்துவமாவனமாநரகக்குழிவாய்
விழுவாரவர்தம்மைவீழ்ப்பனமீட்பனமிக்கவன்போ
டழுவார்க்கமுதங்கள்காண்கவையாறனடித்தலமே. (௫)

துன்பக்கடலிடைத்தோணித்தொழில்பூண்டதொண்டர்தம்மை
யின்பக்கரைமுகந்தேற்றுந்திறத்தனமாற்றயலே
பொன்பட்டொழுகப்பொருந்தொளிசெய்யுமப்பொய்பொருந்தா
வன்பர்க்கணியனகாண்கவையாறனடித்தலமே. (௬)

களித்துக்கலந்ததோர்காதற்கசிவொடுகாவிரிவாய்க்
குளித்துத்தொழுதுமுன்னின்றபத்தரைக்கோதில்செந்தேன்
றெளித்துச்சுவையமுதூட்டியமரர்கள்சூழிருப்ப
வளித்துப்பெருஞ்செல்வமாக்குமையாறனடித்தலமே. (௭)

திருத்திக்கருத்தினைச்செவ்வேநிறுத்திச்செறுத்துடலை
வருத்திக்கடிபவர்வாளெடுத்தோச்சிமருங்குசென்று
விருத்திக்குழக்கவல்லோர்கட்குவிண்பட்டிகையிடுமா
லருத்தித்தருந்தவரேத்துமையாறனடித்தலமே. (௮)

பாடும்பாண்டையுமொந்தையுமார்ப்பப்பரந்துபல்பேய்
கூடிமுழவக்குவிகவிழ்கொட்டக்குறிநரிக
ணீடுங்குழல்செய்யவையநெளிபநிணப்பிணக்காட்
டாடுந்திருவடிகாண்கவையாறனடித்தலமே. (௯)

நின்போலமரர்கணீண்முடிசாய்த்துநிமிர்த்துருத்த
பைம்போதுழக்கிப்பவளந்தழைப்பனபாங்கறியா
வென்போலிகள்பறித்திட்டவிலையுமுகையுமெல்லா
மம்போதெனக்கொள்ளுமையனையாறனடித்தலமே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவையாறு—திருவிருத்தம்,

திருச்சிற்றம்பலம்.

மலையான்மடந்தைமனத்தனவானோர்மகுடமன்னி
நிலையாயிருப்பனநின்றோர்மதிப்பனநீணிலத்துப்
புலையாடுபுன்மைதவிர்ப்பனபொன்னுலகமளிக்கும்
அலையார்புனற்பொன்னிசூழ்ந்தவையாறனடித்தலமே. (க)

பொலம்புண்டரீகப்புதுமலர்போல்வனபோற்றியென்பார்
புலம்பும்பொழுதும்புணர்துணையாவனபொன்னனைய
சிலம்புஞ்செறிபாடகமுஞ்செழுங்கிண்கிணித்திரளு
மலம்புந்திருவடிகாண்கவையாறனடித்தலமே. (உ)

உற்றாரிலாதார்க்குறுதுணையாவனவோதிநன்னூல்
கற்றார்பரவப்பெருமையுடையனகாதல்செய்யு
நிற்பார்தமக்குக்கிளையொளிவானகந்தான்கொடுக்கு
மற்றோர்க்கரும்பொருள்காண்கவையாறனடித்தலமே,

வானைக்கடந்தண்டத்தப்பான்மதிப்பனமந்திரிப்பா
ரூனைக்கழித்துய்யக்கொண்டருள்செய்வனவுத்தமர்க்கு
ஞானச்சுடராய்நடுவேயுதிப்பனநங்கையஞ்ச
வானையுரித்தனகாண்கவையாறனடித்தலமே. (௪)

மாதிரமானிலமாயனவானவர்மாமுகட்டின்
மீதனமென்கழல்வெங்கச்சுவீக்கினவெந்நமனா
தூதரையோடத்துரப்பனதுன்பறத்தொண்டுபட்டார்க்
காதரமாவனகாண்கவையாறனடித்தலமே. (௫)

பேணித்தொழுமவர்பொன்னுலகாளப்பிறங்கருளா
லேணிப்படிநெறியிட்டுக்கொடுத்துமையோர்முடிமேன்
மாணிக்கமொத்துமரகதம்போன்றுவயிரமன்னி
யாணிக்கனகமொக்குமையாறனடித்தலமே. (௬)

ஓதியஞானமுஞானப்பொருளுமொலிசிறந்த
வேதியர்வேதமும்வேள்வியுமாவனவிண்ணுமண்ணுஞ்
சோதியுஞ்செஞ்சுடர்ஞாயிறுமொப்பனதூமதியோ
டாதியுமந்தமுமானவையாறனடித்தலமே. (௭)

சுணங்குமுகத்துத்துணைமுலைப்பாவைசுரும்பொடுவண்
டணங்குங்குழலியணியாவலோககரங்கூப்பிநின்று
வணங்கும்பொழுதும்வருடும்பொழுதும்வண்காந்தளொண்போ
தணங்குமரவிந்தமொக்குமையாறனடித்தலமே. (௮)

சுழலார்துயர்வெயிற்சுட்டிடும்போதடித்தொண்டர்துன்னு
நிழலாவனவென்றுநீங்காப்பிறவிநிலைகெடுத்துக்
கழலாவினைகள்கழற்றுவகாலவனங்கடந்த
வழலாரொளியனகாண்கவையாறனடித்தலமே. (௯)

வலியான்றலைபத்தும்வாய்விட்டலறவரையடர்த்து
மெலியாவலியுடைக்கூற்றையுதைத்துவிண்ணோர்கண்முன்னே
பலிசேர்படுகடைப்பார்த்துப்பன்னாளும்பலரிகழ
வலியாநிலைநிற்குமையனையாறனடித்தலமே. (௰)

திருச்சிற்றம்பலம்.

## திருவையாறு - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

அந்திவட்டத்திங்கட்கண்ணியனையாறமர்ந்துவந்தென்
புந்திவட்டத்திடைப்புக்குநின்றானையும்பொய்யென்பனோ
சிந்திவட்டச்சடைக்கற்றையலம்பச்சிறிதலர்ந்த
நந்திவட்டத்தொடுகொன்றைவளாவியநம்பனையே. (௧)

பாடகக்கால்கழற்கால்பருதிக்கதிருக்கவந்தி
நாடகக்கானங்கைமுன்செங்கணேனத்தின்பின்னடந்த
காடகக்கால்கணங்கைதொழுங்காலெங்கணாய்நின்றகா
லாடகக்காலரிமானேறோர்வலவனையாறனவே. (௨)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவையாறு - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

சிந்தைவாய்தலுளான்வந்துசீரியன்
பொந்துவார்புலால்வெண்டலைக்கையினன்
முந்திவாயதோர்மூவிலைவேல்பிடித்
தந்திவாயதோர்பாம்பரையாறரே. (௧)

பாகமாலைமகிழ்ந்தனர்பான்மதி
போகவானையினீருரிபோர்த்தவர்
கோகமாலைகுலாயதோர்கொன்றையு
மாகவானெயஞ்சாடுமையாறரே. (௨)

நெஞ்சமென்பதோர்நீள்கயந்தன்னுளே
வஞ்சமென்பதோர்வான்சுழிப்பட்டுநான்
றுஞ்சும்போழ்துநின்னாமத்திருவெழுத்
தஞ்சுந்தோன்றவருளுமையாறரே. (௩)

நினைக்குநெஞ்சினுள்ளார்நெடுமாமதில்
அனைத்துமொள்ளழல்வாயெரியூட்டினார்
பனைக்கைவேழத்துரியுடல்போர்த்தவ
ரனைத்துவாய்தலுளாருமையாறரே. (௪)

பரியா னுண்ணியர் பார்த்தற் கரியவர்
அரியபாடல ராடல ரன்றியுங்
கரிய கண்டத்தர் காட்சிபிறர்க் கெலாம்
அரியர் தொண்டர்க் கெளியரை யாறரே. (௫)

புலரும் போது மிலர்பட்ட போற்சுடர்
மலரும் போது களாற் பணியச்சிலர்
இலரும் போது மிலாத துமன்றியும்
அலரும் போதணி யுமையை யாறரே. (௬)

பங்க மாலைக் குழலியோர் பால்நிறக்
கங்கை மாலையாக் காதன்மை செய்தவர்
பங்க மாலை மதியமுங் கண்ணியும்
அங்க மாலையுஞ் சூடுமை யாறரே. (௭)

முன்னை யாறு முயன்றெழு வீரெலாம்
பின்னை யாறு பிரியெனு மம்பைகள்
மன்னை யாறு மருவிய மாதவன்
றன்னை யாறு தொழத்தவ மாகுமே. (௮)

ஆனை யாறென வாடுகின் றான்முடி
வானை யாறு வளாயது காண்மினோ
நானை யாறுபுக் கேற்கவ னின்னருள்
தேனை யாறு திறந்தாலே யொக்குமே. (௯)

அரக்கின் மேனிய னந்தளிர் மேனியன்
அரக்கின் சேவடி யாளஞ்ச வஞ்சலென்
றரக்க னீரைந்து வாயு மலரவே
யரக்கினா னடியா னுமையா றனே. (௰)

திருச்சிற்றம்பலம்.

## திருவையாறு - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

சிந்தை வண்ணத்த ராய்த்திறம் பாவண
முந்தி வண்ணத்த ராய்முழு நீறணி
சந்தி வண்ணத்த ராய்த்தழல் போல்வதோ
ரந்தி வண்ண முடையவை யாறரே.

# கம்பநாடர்.



## கவி வணக்கம்.

அம்பரா வணிசடை யரன யன்முதல்
உம்பரான் முனிவரால யோக ராஜயா
இம்பராற் பிலிக்கரு பிராம வேழருசோ
கம்பராம புலவனைக் கருத்தி லிருத்துவாம்.

சம்ப நாடன் றுமைசெவி சாற்றுபுரு
கொம்ப ருடைய கொழுநனி ராமபபோ
பம்ப நாடனைக் குழகதை பாப் செய்த
கம்ப நாடன் கழலதலை யிறைகொள்வாம்.

**தோற்றுவாய்.**—கம்பநாடர் சரித்திரத்தை உள்ளபடி கோத்தெழுதுவதற்கான ஆதாரங்கள் ஒன்றுமில்லை. பண்டைத்தமிழ்ப் பாவலர் சரித்திரங்களைக் கோத்தெழுதுவதற்கான சாதனங்கள் எவைதாம் உள்ளன? "பழங்காலைத் தூக்காதே புதுக்காலை வெட்டாதே" என்றோதிவிடுகின்ற நாட்டிலே ஜீவசரித்திரம் என்பதொன்றுண்டோ? பலபேர்களுடைய வரலாறுகளும் ஒரே அச்சிலே வார்த்தெடுத்தாற்போல ஒரு படித்தாகத்தானே இருக்கும். எவரிடத்தேனும் சில குணங்களும் செயல்களும் சிறந்து தோன்றினால், அவைகள் கன்னபரம்பரையிலே பாரித்துத் தூவித்துப் போகின்றன. மாறுசரியததால் உலகத்தைச் சேர்ந்து உளிப்பிடி ஆவதும் உண்டு. (Mackenzie) மெக்கன்சி என்னும் தண்டத்தலைவர் இரண்டிலக்ஷ ரூபா வரையில் செலவிட்டுச் சேகரித்த ஏட்டுப்பிரதிகளும் பாவலர் நாவலர்களை மூடியிருக்கும் அந்தகாரத்தைப் போக்கினபாடில்லை. துரைத்தனப் பணத்தை வாரியிறைத்துப் புராதன சிலாசாசன ஆராய்ச்சி செய்கின்ற விற்பனர்களும் தமிழ்ப் புலவர்களுடைய ஜீவகாலக்கிரமத்தை இதுகாறும் வரையறை செய்ததுமில்லை. ஆயினும் நிகழும் சகாப்தத்தின் ஆதியில் வதிந்த

மாணுக்கர்கள் இருந்த நிலைமையில் இப்பொழுது நாமிருக்கவில்லை. அச்சியந்திரம் ஊன்றி வேர்கொண்டுவிட்டது. இருந்த இடமுந் தெரியாமல் பெட்டி பேழைகளில் உக்கி மக்கிக் கிடந்த பழம் பனுவல்களை ஒவ்வொன்றுய் அசசியந்திரத்தின்மீது ஏறிவருகின்றன. சிலாசாசனங்கள் முதலான சாதனங்களில் சிற்சில அசசிற் கிடைக்கின்றன. புராதன புலவர்களில சிலர் 'நாங்கள் இன்னின்ன காலத்தவர்' என இப்பொழுது கண்ணெதிர்ப்படுகின்றார்கள். நம்முடைய மைநதரும் அவா மைந்தரும் அபபுலவாகளை இன்னும் நன்குணரககூடும். புலவர் சரிதஙகளையும் அவாகள் இயற்றிய நூலகளையும் பலமுகத்தான ஆராய்வது இன்னும் நமககுக் கைவநதிலாத நவமான காரியமாகவே இராநின்றது. நூல்களின் குற்றநறறஙகளை ஆராய்வதற்கான கருவிகள் நமககு இன்னுஞ் சாலவில. புராதன கவிகளை இக்காலததுக கடடளைக்கருவிகளான் அளநது பாாபபதும் தககதொனறன்று. ஆகவே இந்த வியாசததில கமபநாடரது ஜீவசரிததததை விரிவாக ஆராயபபுகுவதும் அவருடைய நூலகளின தராதரஙகளைப பலபடத் தேடித் துருவிபபாாப்பதும ஆன நோக்கம் இலலை. ஏனைக் கவிராயாகளில் இவா எம்மாததிரம்? ஏனைககாவியஙகளில் இவருடைய இராமாயணம் எம்மாததிரம்? என்பன துணிவதே இந்த வியாசத்தின் ஒரு தலையான நோககம். இவருடைய புலமையினையும் குணங்குறிகளையும் இராமாயணததால அறியக்கூடுமாயின் அவறறை ஆராய்வதும் இநத வியாசத்தின் ஒருபுடை நோககமாம.

காவியகதியின் பூருவோத்தரம்.—தமிழிலககியத்தின் இறந்தகால சரிததததை ஆராயப்புகுவோமாயின, ஆசிரியா அகத்தியனுர் காலத்துககு அபபால அடியெடுத்துவைகக இயலாது. அககாலம் தலைசசஙகமிருந்து தமிழாராயசசி செய்த காலமாகும். அக்காலத்தில இயற்றமிழ, இசைததமிழ, நாடகத்தமிழ என்னும் மூன்றுதமிழும் வழககாறுடையனவாக இருந்தன. அம்மூவகைத்தமிழையும் வகைப்படுத்தி அகததியனுர் அகத்தியம் எனத் தமது பெயரால ஓா இலக்கணத்தை அருளிசசெய்தார். அவர் மாணுக்கர் பன்னிருவரில முதன்மைபெறறவரான தொல்காப்பிய முனிவர், அகத்தியத்தின் இயற்றமிழ்க் கூறுபாட்டினை ஆதாரவாகக்

கொண்டு தம்பெயரால் தொல்காப்பியம் என்னும் இலக்கணத்தை அருளிச்செய்தார். அகத்தியமுதலாக ஏனை இலக்கணங்களெல்லாம் இறந்தனவாக, இன்றுகாறும் ஓரெழுத்தளவும் சிதைவுறாது எஞ்சிநிற்பது இத்தொல்காப்பியம் என்னும் இலக்கணம் ஒன்றுமேயாம். நன்னூல் சின்னூல் முதலியவற்றைப் பெற்றெடுத்த இவ்விலக்கணம், எழுத்தையும் சொல்லையும் ஆராய்வதுடனே, பொருளிலக்கணத்தை நிரம்பவும் ஆராய்கின்றது. இப்பொருளிலக்கணம் ஒன்றுமே தலைச்சங்கத்திறுதியும் முற்பட்ட காலத்துக் கவிகள் கூறினபொருளைத் திறந்துகாட்ட வல்லதான திறவுகோலாய் இராநின்றது. அப்பொருளாவது, அகப்பொருளென்றும் புறப்பொருளென்றும் இரண்டு பாகுபாடுடையது. அவற்றுள், அகமாவது- "ஒத்த அன்பினராகிய தலைவனும் தலைவியும் தம்முட் கூடுகின்றகாலத்துப் பிறந்து, அக்கூட்டம் நிகழ்ந்தபின்னர் அவ்விருவராலும் ஒருவர்க்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய், எப்பொழுதும் உள்ளத்துணர்வினால் மாத்திரமே அநுபவிக்கப்படும் இன்பமாம்." [ஆகுபெயரிலக்ஷணத்தால் இன்பம்பற்றி அகத்தே நிகழும் ஒழுக்கத்தை அகம் என்பர். அகம்-உள்.] "புறமாவது - மேற்கூறிய ஒத்த அன்புடையார் தாமேயன்றி எல்லாராலும் அநுபவித்து உணரப்படுவதாய், இஃது இவ்வாறிருந்ததெனப் பிறர்க்கும் எடுத்துக் கூறப்படுவதாய், அறமும் பொருளும் என்னும் இயல்பினை உடையதாய்ப், புறத்தே நிகழும் ஒழுக்கமாம்." [ஆகுபெயரிலக்ஷணத்தால் அறமும் பொருளும்பற்றிப் புறத்தே நிகழும் ஒழுக்கத்தைப் புறம் என்ப. புறம்-வெளி.] ஆகவே அக்காலத்துத் தமிழ்ப்புலவர்கள் அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றையும் பாட்டிலமைத்துப்பாடினர் என்பதுபோதரும். இடைச்சங்கத்து நூல்களிலும் கடைச்சங்கத்து நூல்களிலும் எஞ்சி நின்றனவற்றை ஆராய்ந்து பார்க்குமிடத்தும் இது துணியப்படுகின்றது. தமிழ்நாட்டின் கருப்பொருள் உரிப்பொருள்களை அமைத்து அறம் பொருளின்பங்களை விளக்கி அரசர்கள் வள்ளல்கள் முதலானோரது புகழினையும் சரிதங்களையும் விரித்துப்பாடிய நூல்கள் சொற்றொடர் நிலைச்செய்யுள் பொருட்டொடர் நிலைச்செய்யுள் என வரையறுக்கப்பட்டிருக்கின்றன. காவியம் என்னும் பெயராவது

காவியலக்ஷணமாவது தொல்காப்பியத்திற் கூறப்படவில்லை. வடமொழியில்தானும் காவியம் என்பது, தொல்லைநாளில, கவியொருவன் பாடினதுயாது, அதுவே காவியம் எனப் பொதுவகையால் வழங்கினதல்லது யாதொருவகைப்பட்ட நூலைச் சுட்டிவந்ததில்லை. வான்மீகிமுனிவர் அருளிச்செய்த இராமாயணம் சிறப்பு வகையால் காவியம என வழங்கப்பெற்றது. அதுமுதலாக அத்துறைப்பட்ட நூலகள வடமொழியில் காவியம என வழங்கலாயின.

கடைச்சங்கத்தார காலத்திலே வடமொழிவல்ல ஆரியரும் தென்மொழிவலல தமிழரும் நெருங்கிப் பழகுவாராயினர். வடமொழிவலலவர் தங்கள் கோட்பாடுகளையும் கருததுக்களையும் தமிழர்களிடத்தில் எடுத்துபபேசுவா. தமிழரும் வடமொழியை ஓதுவர். ஜைனரும் புததரும இவவிரணடு மொழிகளிலும் கைவந்தவர்கள். இதனால் வடமொழிப்போககுகளும கருத்துகளும் தமிழநூல்களில விரவுவன ஆயின. தமிழககவிராயர்கள வடமொழி நூல்களின போக்கைப் பினபற்றிக் கவிபாடுவாராயினர். இஙஙனஞ் செயயலுறறவர்களில் மிகச சிததிபெறறவா திருத்தக்கதேவா என்பவர். இவா செயத நூல சீவகசிந்தாமணி. அவர்தாம இயற்றிய நூலில ஜைனமத சித்தாந்தங்களை அஙகஙகே ஏற்றுவதனையே ஒருதலைக் கருததாகக கொண்டவராயினும், வடமொழிக் காவியப் போககினைத தமிழில கொணர்ந்து கூட்டும் ஒரு சார் கருத்தினையும் நிறைவுறுததினர். சிலபபதிகாரமுதலிய தமிழப் போக்கே போககான நூல்களுடனே ஒப்பிட்டுப்பாரத்தால் இந்த வேறுபாடு நன்கு புலப்படும. ஜைனாகள் இயற்றிய ஐஞ்சிறு காப்பியங்களும் இவ்வடமொழிப போககினையே பின்பறறினவாம். திருத்தொண்டர் புராணமுடையாரும் வடமொழிப்போககினையே கையாண்டவா. கம்பநாடர் வடமொழிப் போக்கைப் பின்பற்றிய தமிழ்க்காவியங்களை ஓதி அவற்றின் கட்டுக்கோப்பின் மர்மங்களை நன்குணர்ந்தவராகி, தமக்கு எடுத்துககாட்டாக இருந்த காவியஙகளினும் சிறந்த காவியம் பாடுவாராயினர். அதுமுதலாக அப்பால் பிற்காலத்துக கவிராயாகளுக்குக் கம்பராமாயணமே மேல்வரிச்சட்டமாகிவிட்டது. சிந்தாமணி முதலாக இற்றைநாட் கா

வியங்கள் இறுதியாக உள்ள எல்லாவற்றிற்கும் கம்பராமாயணம் சிரோரத்தினமாக விளங்குவதாயிற்று. இந்தச் சிறப்பினை உட்கொண்டே அக்காலத்தவர் கம்பநாடரைக் **கவிச்சக்கரவர்த்தி** எனக் கொண்டாடினார்கள். அவர் நூலையும்,

> அம்பிலே சிலையைநாட்டி அமரர்க்கன் றமுதமீந்த
> தம்பிரா னென்னத்தானுந் தமிழிலே தாலைநாட்டிக்
> கம்பநா டுடையவள்ளல் கவிச்சக்ரவர்த்தி பாரமேல
> நம்புபா மலையாலே நரருக்கின் றமுதமீந்தான.

எனப் புகழ்ந்தார்கள.

**எடுத்துக்கொண்ட விஷயம்.**—கவிச்சக்ரவர்த்தியாகின்ற இவர் யார்? இவர் எக்காலத்தவர்? அவர்காலத்து ஏனைப் புலவர்கள் எவர்? இவர்க்கு ஓதலான நூல்கள் எவை? அவற்றில் எவற்றால் இவர் புலமை உருப்பெற்றது? இக்கவிராயரையும் இவர் புலமையினையும் சிறப்பெய்துவித்த இராமாயணத்தின் முக்கிய மிசங்கள் என்ன? இவர் அருளிச்செய்த ஏனை நூல்கள் எவை? இவரைக்குறித்து இவர் இயற்றிய நூல்களால் ஏதேனும் அறியலாகுமோ? முன்னே தோற்றுவாய் செய்தபடி இந்த வியாசத்தில் விடுக்கப் புகுந்த விஷயங்கள் இவ்வினாக்களேயாகும். கைகெட்டலான சாதனங்களின் சார்பைக் கொண்டு, ஒருதலைச் சார்பாக ஒன்றுங் கூறாமல, நடுவு நிலைமையாகவே இயன்றமட்டில் இவ்வினாக்களை இங்கு விடுக்க முயல்வோம். "எப்பொருளெத்தன்மைத் தாயினு மப்பொருள, மெய்ப்பொருள் காண்ப தறிவு."

**ஆசிரியர் பெயர்.**—தமிழாசிரியர்களில் எவருடைய பெயர்தான் உள்ளபடி வழங்குகின்றது? புராதன கவீச்வரர்களுடைய பெயர்களெல்லாம் ஒட்டுப்பெயர்களாகவே இருக்கின்றன: அவரவர் பிறந்து வளர்ந்த நாட்டினடியாகப் பிறந்த இடப்பெயராதல் ஒன்று, குணங்குறிசெயற்கை விசேடத்தால் உண்டான காரணவிடுகுறிப்பெயராதல் ஒன்று. இவ்வாசிரியர் கதியும இதுவாயிற்று. இவர் கம்பர் என்றும் கம்பநாடர் என்றும் கம்பநாட்டாழ்வார் என்றும் வழங்கப்பெறுவர். கம்பர் என்பது ஏகாம்பரமுடையாரது பெயரின் மரூஉ வென்பர் சிலர். காளி வரம்பெற்றுக்

கவிபாடுமுன்னே அயிலிலாச் சிறியராயக கம்பம்போல் இருந்தவராதலின் இவரை ஏனைச்சிறுர்கள் கம்பன் கம்பன் என்றழைத்துவந்த காரணத்தால கமபர் எனப்படுவாராயினா என்பா வேறு சிலர். இவருககு இளமையில கல்வி பயிற்றுவிதத கணககாயரது கம்பங்கொல்லையைக் காத்துவந்த காரணததால கம்பர் எனப்பட்டார என்பாருமுளா. "கதிரைமாளத் தின்னும் காளிங்கராயன், குதிரைமாளக் கொண்டுபோ" என்று முனனேசொல்லிப பின்பு "குதிரை மீளக்கொண்டுவா" எனக் காளிஙகராயன் குதிரையைச சாகவும் வாழவும் பாடியதைககேட்டு, அரசன் இவரை வருவித்த வளவிலே இவரும் கம்பஙகொல்லையைக காத்த கம்பத்துடனே சென்றாராக, இவரைககண்ட அரசன் "இககம்பனே அது செய்தவன்" எனக கேடடதனல உண்டான பெயர் என்றும் உரைப்பர். கம்பநாடு இவருடைய முன்னோாகளது ஜன்ம தேசமாகையால, இவா கமபா-கமபநாடா என்று பெயாபெறறவராயினா் என்பதே உண்மை. இவர் இராமபகதியில ஆழ்ந்து ஈடுபட்டிருப்பதைக கண்டு வியந்த ஸ்ரீரங்கத்து விததுவாஙகள் இவரைக கமபநாடடாழ்வாா எனப் புகழ்ந்தாாகள. இவரைப புகழ்ந்து பாடிய தனியன்களில "கம்பநாடுடையவள்ளல" என்றும் "கம்பநாடடாழ்வான் கவி" என்றும் வருவன இதறகுப் பொருந்தும். தஞ்சையில் இவர் திருவழுந்தூரில பிறந்தவரென்பது, "மனறேபுகழுந திருவழுந்தூர் வள்ளல்" எனச சடகோபரந்தாதியிலும் "சீரணிசோழநாட்டுத் திருவழுந்தூரில வாழவோன்" என இராமாயணத் தனியன் ஒன்றிலும் வருவனவறறாலறியப்படும். இபபொழுது தேரழுந்தூா என வழஙகும் திருவழுநதூரிலே கமபாமேடு என்று ஒருமனே வழங்கிவருவதும இதனே வலியுறுத்துகின்றது.

**வமிசமரபு.**—இவர் ஒரு அரசனுடைய புதல்வர் என்றும ஓச்சன் வீட்டில் வளர்ந்தவர் என்றும் சிலர் கூறுகின்றனா. திருவழுந்தூர்ப் பிடாரிகோயிற் பூசைசெய்யும் ஓச்சனுடைய பிள்ளையே எனக் கூறுவார் சிலர். இவர் தன்மகன் அம்பிகாபதியை அரசன் கொன்ற காரணம்பற்றிப் பழிவாங்கத் தருணம் பார்த்திருந்தவர், வேட்டையாடும்போது. ஒரு யானையால் துரத்திவரப்பட்

ட அரசகுமாரனைக் "காட்டானைவிட்டாலும் கவியானை விடாது" என்று ஈட்டியால் குத்திக்கொன்றனர் என்பதொரு கதையைக் கொண்டு, இவர் க்ஷத்திரியரல்லராயின் அங்ஙனஞ் செய்யத் துணியார் என யூகித்து, இவரை இராஜவமிசத்தில் பிறந்தவர் என்பர். இவர் உள்ளபடி க்ஷத்திரியராயின், தமிழ்நாட்டு மூவேந்தரும் ஒரொருகால் இவரிடத்து உள்ளப்பற்றுடையராயிருந்ததனால், இவராயினும், இவர் புதல்வராயினும், புதல்வர்ப் புதல்வராயினும் யாதொரு நாட்டையாவது ஊரையாவது கொடுக்கப் பெற்று, அரசியல் நடத்தியிருக்கலாம். எல்லாரும் பாவலரும் நாவலருமாகத் தானே காலங்கழித்தனர். ஆகவே "மகனறிவு தந்தையறிவு" என்ற பிரமாணத்தைக்கொண்டு பார்க்குமிடத்தும் இவர் க்ஷத்திரியரல்லர் என்பதே துணியப்படுகின்றது. வெண்ணெய்நல்லூர் சடையப்பமுதலியார் முதலாயினோரும் மூவேந்தரும் கம்பருடனே சமபந்திபோஜனம் செய்ததாகவும், கம்பருடைய மாணாக்கரான ஏகம்பவாணமுதலியார் கம்பர் வீட்டிலே சில நாளிருந்து விருந்துண்டதாகவும் கூறப்படுதலால், கம்பரை உச்ச ஜாதியைச் சேர்ந்தவர் என்பதும் பொருந்தாது. "உழுங்குலத்திற் பிறந்தாரோ உலகுய்யப் பிறந்தாரே" என வேளாளரைப் புகழ்ந்து பாடிய ஏரெழுபதைக் கூவிக்கும்பாடியிருக்கலாம்; அல்லது "அழுவதுங்கொண்டு புலம்பாமனஞ் சண்டதுமறைத்தே, ரெழுவதுங்கொண்டு புகழ்க்கம்பநாடனெழுப்ப" என்று தொண்டைமண்டலசதகச் செய்யுளின்படி ஏரெழுபதை வெண்குன்றத்தூர்த் தவளகிரி முதலியார் பொருட்டாகப் பாடியிருக்கலாம் என்று கொண்டு, கம்பரை வேளாளரல்லர் எனக் கூறவுங்கூடும். இவர் தமது அன்னதாதாவான சடையப்பரை இராமாயணத்தில் பலவிடத்தும் புகழ்ந்தாரேனும், தாமும் வேளாளரல்லரேல், திருவபிடேகப் படலத்தில் "வெண்ணெயூர்ச் சடையன் றங்கள் மரபுளோர் கொடுக்கவாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி" எனப் பாடப் பொறுப்பரோ? இஃதன்றியும், சடகோபரந்தாதியில் இருபத்தாறாவது கலித்துறையில், பூவைசிய குலோத்தமரான நம்மாழ்வாரைக "குருகூரெங்கள் குலக்கொழுந்தே" எனக் கூற இயைவரோ?

**இளமையும் கல்விப் பயிற்சியும்.**—காளிங்கராயன் குதிரையால் இவர் காளிவரம பெற்ற கதையைப பலரும் கேட டிருப்பார்கள். ஒரு பிரமராக்ஷசனுடைய உபதேசத்தால கம்பா கவிபாடுந் தெயவப்புலமை பெறறனரெனத் தொழுவூா ஸ்ரீ வேலா யுதமுதலியாா பதிதத ஏரெழுபது முகவுரையில உரைத்திருக கின்றது. இத்தன்மைத்தான கதைகளால பெறபபடும் உண்மை யாவது, அவா இளமையிலேதானே கவிபாடுந்திறமுடையவர் என்பதேயாகும். இளமையில சடையப்பமுதலியாா வீட்டில வளர்ந்தபடியால் அம்முதலியாருடைய மைநதரோடு இவரும் ஒரு கணக்காயரிடத்தில சிறிது கலவிபபயிற்சி செய்யப்பெற்றனா என்பதில ஐயமின்று. இவா வரகவி என்று கூறுவாா கூறுக. இவர் பல நூல்களையும் படித்தவர் என்பதற்கு இவருடைய இராமாயணமே சானறுபகரும். மறறைபபடி இவர் இளமைப்பருவத்துச்செயல்கள யாதொனறும் கனணபரம்பரையாகத் தானும் வழங்குவதின்று. முந்நூறுவருஷங்களுக்கு முன்னிருந்த மகாகவியான ஷேகஸ்பியரைக் குறிதது இஙகிலீஷ் சரித ஆசிரியாகள் என்ன விசேஷங் கண்டுபிடிதது விட்டாாகள. ஷேகஸ்பியா பிறந்த தேதியே இன்னும் சநதேக ஆஸ்பதமாகததானே இருககிறது. இங்கிலாந்தில ஆதிகவியாகிய சாஸர் இறந்த வருஷம இன்னும் துணிந்தபடி இலலையே. ஆகவே கம்பா இளமையைககுறித்து நாம் ஒன்றும் உணராமலிருப்பது அதிசயமாகுமா? கன்னபரம்பரையும் கட்டுக்கதையுமே வழக்காறுன இந்த நாட்டில கம்பருடைய கால வரையறையாயினும் பரும்படியாகவேனும தெரிவதான சில ஏதுக்கள் உளவாயிருபபது எவ்வளவு சிரேஷ்டம்.

**கம்பர்காலம்.**—இராமாயணத் தனியன் ஒன்று

எண்ணிய சகாத்தமெண்ணூற் றேழின்மேற் சடையன்வாழ்வு
நண்ணிய வெண்ணெயநல்லூர்தனனிலே கம்பநாடன்
பண்ணிய விராமகாதை பங்குனி யத்தநாளில்
கண்ணிய வரங்கர்முன்னே கவியரங் கேற்றினானே.

எனப்பாடியிருப்பது கொண்டு கம்பர்காலம் கிறிஸ்தாப்தம் 885-அதாவது 1000 வருஷத்துக்கு முறபட்டதென்று சொலலலாம்.

ஆனால், "எண்ணரிய சாத்திரத்தோர் சொற்றமிழின்மேல் சடையன் வாழ்வு" என்னும் பிரதிபேதமிருத்தலால் இது ஒரு தலையாத்துணிதல் கூடாததாக இருக்கின்றது. இராமாயணத்தில் உத்தரகாண்டம் ஒட்டக்கூத்தர் பாடினது என்பது உலகப்பிரசித்தம். புகழேந்தியானவர் ஒட்டக்கூத்தர் காலத்தவர் என்பதற்கு

"நாவா கவிவல்ல [illegible]
கோவா கவிதொட்டக் [illegible] சோழியனாய்
மேலா [illegible] கொண்ட
மாலார் [illegible] புகழேந்தி [illegible] தண்டைவிட்டே."

என்றுரைப்போர் சான்றாக வுள்ளன.

"பாவிற் புலவா [illegible]
குலேந்தி குலோத்துங்க [illegible]."

என்ற தனிப்பாடலால் குலோத்துங்கசோழன் ஒட்டக்கூத்தருடைய மாணாக்கன் என்பது தெளியப்படும். குலோத்துங்கச்சோழனை நோக்கி

[illegible]
அடைந்தோரை [illegible]
கடந்தாயே சாலா நீடி."

எனக் கம்பர் கூறினதாகவும், புகழேந்தி அவனை நோக்கி,

"பழியும் புகழு மெவர்க்கு முண்டாமிந்தப் பாரிலென்
கழியுந் தொல்லையுங் கண்டுமென [illegible]."

எனக் கூறினதாகவும் தனிப்பாடல்கள் வழங்கி வருகின்றன. இவையெல்லாம் குலோத்துங்கச் சோழனையே நோக்கினவாமாதலின், கம்பர், ஒட்டக்கூத்தர், புகழேந்திப் புலவர் என்னும் மூவரும் அவ்வரசன் காலத்தினர் என்பது தேற்றமாம். II-வது இராஜேந்திர சோழனுக்கு I-வது குலோத்துங்கனென்று பெயர். அவன் கி. பி. 1063-ம் ஆண்டிலே அதாவது சாலிவாகன சகாப்தம் 985-ம் ஆண்டிலே சிங்காசனம் ஏறினான் என்றும், II-வது குலோத்துங்கச் சோழன் 1127-ம் ஆண்டிலே சிங்காசனம் ஏறினான் என்றும், 1894-வது வருஷத்து இந்தியன் ஆண்டிக்வெரி (Indian Autiquary) என்னும் இந்துதேச புராதன கலாவிசார பத்திரிகையின் அக்டோபர் மாதத்துச் சஞ்சிகையில் சோழர்க

ளுடைய தேதிகள் என்னும் தலைப்பின்கீழ ஹலடஸ் எனனு ஐரோப்பிய புலவர் நிர்ணயஞ் செய்திருக்கிறார். I-வது இராஜேந்திர சோழன், கம்பனையும் ஒட்டக்கூத்தனையும் இராமாயணம் பாடும்படி ஏவினன் என்றும், I-வது குலோத்துங்கன் காலத்திலே இராமாயணம் அரங்கேறியதென்றும் கூறுகின்றார்கள். ஆகவே கம்பர் சாலிவாகன சகாப்தம 985-க்கு முன்னும் பின்னும் இருந்தவர எனறேற்படுகின்றது. அம்பிகாபதிககுக கலியாண மகோற்சவம் நடந்தேறுகையில சடையப்பமுதலியார சிறிது காலந் தாழ்த்து வந்தமையின், இருக்க இடம்பெறாது சாலவககடையின் அருகில் நின்றதைப பார்த்து வருந்திய தன் மனைவியை நோககிக கம்பர் "என் ஐயனை வைக்குமிடத்தில வைபபேன் வருந்தாதே" என்றதும், இவர் அறுபதாவது பிராயத்தில காலகதியடைந்ததார் என்றதும் உண்மையானுல், இவர் நாற்பது பிராயத்துக்கு மேல் ஐம்பது பிராயத்துக்குள்ளாக இராமாயணம் பாடியிருகக வேண்டும். ஆகவே இவர் கிறிஸ்தாபதம 11-வது நூற்றாண்டின் முன்பாகத்தில பிறந்தவர் எனபது முடிவாகிறது.

ஔவையாரும் இவருடன் ஏககாலத்தினர் எனக கூறப்படுகின்றனர். இதைத் தலைககாட்டுவது இலகுவான காரியமன்று. "கானமயிலாடக் கண்டிருந்த வான்கோழி" என்னும் வாக்குண்டான மடியில வருகின்ற 'வான்கோழி' என்னும் வார்த்தை இஙகிலீஷில் தாககி (Turkey) எனனும் வார்த்தையின் பிரதிபதமென்றும், அங்கிலேயர் இஙகு வருமுன்னர் இஙகே வான்கோழி என்பதொன்று கிடையாதென்றும, ஆகவே ஔவையார சில காலத்துக்குமுன் னிருந்தவராதற்பாலர் என்றும சில அஙகிலேயர் மன்றுடுகின்றனர். வான்கோழி என்பது நிகண்டு திவாகரங்களிற் காணுத சொல்லாக இருக்கின்றது. வின்ஸ்லோ அகராதியில் வான்கோழி என்பதற்குப பெரியகோழி எனபபொருள் உரைத்திருக்கின்றது. சில ஆசிரியர்கள் வான்கோழி என்பதற்கு மேற்காட்டிய அடியில பெண்மயில என்பது பொருள எனக்கூறுகின்றனர். இங்ஙனம் பொருளுரைத்த ஒருவர் "ஆண் ஆடுவதைக் கண்டு பெட்டை ஆடுமென்றும், ஆண் ஆடுஞ் சீர்போலப் பெட்டை ஆடாதென்றும், ஆண் ஆடி நின்றவுடன் பெட்டையும் நின்றுவிடுமென்றும், அறிந்து, இவ்வாறே உரைசெய்யலாயிற்று"

எனக் காரணமுங் காட்டியிருக்கின்றனா. ஆகவே ஔவையார் கொஞ்சகாலத்துக்கு முன் இருந்தவர் என்பது உறுதிப்படுவ தில்லை.

சிலப்பதிகாரம் இரண்டாவது மதுரைக்காண்டத்தின் ஈற்றில்,

தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்
தெய்வந் தொழுந்தகைமை திண்ணமாய்—தெய்வமாய
மண்ணக மாதாக் கணியாய கண்ணகி
விண்ணக மாதர்க்கு விருந்து.

என்ற வெண்பாவிலும், மணிமேகலை சிறைசெய்த காதையில்,

"மாபெருந்தெய்வந் தோன்றிமடக்கொடி
நீகேளென்றே சேரிழைக்குரைக்கும்
தெய்வந்தொழாஅள் கொழுநற்றொழுமவள்
பெய்யெனப்பெய்யும் பெருமழையென்றவப்
பொய்யில்புலவன் பொருளுரைதேறாய."

என்றவிடத்தும்,

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை."

என்ற திருக்குறளை உதகரித்திருப்பதனாலே திருவள்ளுவர் மேலைக் காவியங்கள் பாடுமுன்னரே இருந்தவரென்பது பெறப்படும். க தை ஒன்றுக்கொன்று தொடர்ச்சியாய் ஏககாலத்துச் செய்யப் பட்டன மேற்கூறிய சிலப்பதிகாரமும் மணிமேகலையும். அவற் றில சிலப்பதிகாரத்தில் "கடல்சூழிலங்கைக் கயவாகுவென்பான்" என்று கூறப்பட்ட அரசன் சிங்களத்தீவில கி. பி. 113 ஆண்டி லே அரசியல் பெற்றானென மகாவமிசம் என்னும் சரித்திரத்தி லே செப்பி யிருக்கிறது. ஆகவே வள்ளுவனார் 1800 வருஷங்க ளுக்கு முற்பட்டவர் என்பது தெளிவாகின்றது. ஔவையார் திருவள்ளுவருடன் பிறந்தவரென்பது கபிலரகவல் முதலியவற் றால் துணிந்தபடியாதலின் ஔவையாரும இற்றைக்கு 1800-வரு ஷங்களுக்கு முற்பட்டவர் என்பது பெறப்படும். ஆகவே ஔவை யார் கிறிஸ்தாப்தத்தின் தொடக்கத்திலே பிறந்தவர் என்றவாறு யிற்று.

புறநானூற்றில் ஔவையார் பெயரால் 33-அகவல்கள் வரை யில் காணப்படுகின்றன, அதனால் ஔவையார் எப்படியும் கடை

ச்சங்கத்தார் காலத்தினரென்பது அறியப்படுகின்றது. புறநானூற்றில் பாடப்பெற்ற பாரி என்னும் வள்ளலை,

"கொடுக்கிலாதானைப் பாரியேயென்றுகூறினுங் கொடுப்பாரிலையே."
எனச் சுந்தரமூர்த்தி நாயனார் தமது தேவாரத்தில் கூறியிருத்தலானும், கி. பி. 5-வது நூற்றாண்டுக்கிப்பாலும் 7-வது நூற்றாண்டுக்கப்பாலும் இருந்தவரெனத் துணியப்பட்ட சம்பந்தமூர்த்தி நாயனாருக்குச் சுந்தரர் பிற்பட்டவராதலானும், சுந்தரர் சங்கத்திற்கு நெடுங்காலம் இப்பாற்பட்டவரென்பது தேற்றம்.

"தேவர் குறளுந் திருநான் மறைமுடிவும்
மூவர்தமிழும் முனிமொழியும்—கோவை
திருவாசகமுந் திருமூலர் சொல்லும்
ஒருவாசகமென் றுணர"

என்ற நல்வழிவெண்பாவில் மூவர்தமிழும் என்பது மூவர் தேவாரத்தை யாதலால் சுந்தரமூர்த்தியாருக்குப் பின்னரும் ஒளவையார் இருந்தனரென்பது உறுதியாகின்றது.

இவர் பின்னும் குலோத்துங்கச் சோழராஜன் காலத்திலும் இருந்தாரெனின் அதிசயம் இன்னும் அதிகரிக்கின்றது.

தண்ணீருங் காவிரியே தார்வேந்தனுஞ் சோழன்
மண்ணாவதுஞ் சோழ மண்டலமே—பெண்ணாவாள்

என்றுபாடி 500 பொன்வாங்கிக்கொண்டு கம்பர் போய்விட, ஒளவையார் கூறிற்றாக

அம்பொற் சிலம்பி அரவிந்தத் தாளணியும்
செம்பொற் சிலம்பே சிலம்பு.

என்ற இரண்டடிகளைச் சேர்த்து வெண்பாவை முடித்துவிட்டதனாலே, இதைக்கேட்ட கம்பர் சினங்கொண்டு "கூழிற்குப் பாடிக் குடியைக் கெடுத்தாள்" எனக்கூறியது இன்றளவும் தென்னாட்டில் பழமொழியாக வழங்குகின்றதென்று பாவலர் சரித்திர தீபகத்தில் பகர்ந்திருக்கின்றது.

ஒளவையார் கம்பரைச் சற்று அவமரியாதையாகவும் புகழேந்தியை மரியாதையாகவும் நடத்தினதாகச் சில தனிப்பாடல்கள் எடுத்துக்காட்டப்படுகின்றன. அதனால் இவர் கம்பர் காலத்தவரென்பது ஏற்படுகின்றது. ஆகவே ஒளவையார் 1000-வருஷகாலம் வசித்திருந்தவர் என நம்புதல்வேண்டும். இதனால், திருவள்

ளுவருடன் பிறந்து சங்கத்தார் காலத்திருந்த ஔவை வேறு, கம்பர் காலத்தில கூழுக்குப்பாடிய ஔவை வேறு என்கிற கோட்பாடு வேரூன்றி வருகின்றது. "அந்த வெள்ளை யிந்த வெள்ளை யாமிருவரென்றதை, மைந்தானை வருங்கால மதிபடறியா மனத்தினரே" என்ற புலவர் புராணம "முனனெளவை கலிவருட மூன்றுவதாயிரத்தாள், பின்னெளவை நாலாவதாயிரத்திற் பிறந்திட்டாள்" என்றும் "விக்கிரமார்க்க னபுவியின் மேவுமூன்றொ ளொருத்தியுறு, ருக்கிரனுரு சாலியவா னுற்றவெண்ணூற றேழாண்டின், மிககிகலுங் கம்பனிடம வேதனைப்பட் டாளொருத்தி" என்றும உரைக்கின்றது. தமிழ் விதவாமிசாகள இவளை இருநூற்றைம்பது வருஷம பிழைததிருந்தவா எனக கன்னபரமபரையாகக கூறிவருகின்றாகள. இவாகள இஙஙனங கூறுவது இவர்சள் கொள்கைப்படி எநத ஔவையை என்று தெளிவாகத தெரிதலில்லை. இனிச சுநதரமூாததி நாயனாரும சேரமான பெருமானாயனாரும், முறையே வெள்ளையானைமீதும குதிரைமீதும கைலாயஞ்சென்றபோது, விநாயகரருளால ஔவையாரும் அவ்விருவாககு முன்னே கைலாயத்தை யடைந்து, தமககுப பிறபட்ட சேரமான் பெருமானைபபாாத்து, "மதுரமொழி நலலுமையாள் சிறுவன் மலரடியை, முதிரநினையவலலாாக கரிதோ முகிலபோன முழங்கி, அதிர வருகின்றயானையுந தேருமதனபின்சென்ற, குதிரையுங் காதங் கிழவியுங காதங்குல மன்னனே" என்றுரைததாகக் கூறும் கன்னபரம்பரை உண்மையானால, மூவா ஔவையாா இருந்ததாக நம்புதல வேண்டும. புறநானூற்றில 91-வது பாடல், அதியமானஞ்சி என்னும் வள்ளலிடத்தில ஆயுளை வளர்விப்பதான ஒரு செலலிககனியைப பெற்றுண்டு ஔவையார் மனமகிழ்ச்சியால் பாடினதென்றும், பந்தனென்கிற வணிகவள்ளலைப்பாடி (பந்தனந்தாதி) அவன் கொடுக்கப்பெற்ற பொற்படாமானது நரைதிரை நீக்குவதொன்றென்றும் கூறப்படுதலாலும், ஔவைக்குறளால் அவர் யோகமறிந்தவராகக் காணப்படுதலாலும், இவா நெடுங் காலம் பிழைத்திருந்திருக்கக்கூடும். காயாதி கற்பமுண்டு காயசுத்திசெய்துகொண்டு பன்னெடுங்காலம் உயிர்த்திருக்கும் சித்தர்கள் வாழ்வதாய் நம்பப்படுகின்ற இந்நாட்டில் ஔவையார் பலகாலம் சீவித்திருந்தார் என்பது குற்றமாகாது, பொய்யுமாகாது.

இதனை நம்புதலில்லாதவர்க்குத திருஞீலநாயனுர் முதலானவருடைய வரலாறு பொய்படும். ஔவை என்ற பெயருக்கு தவப் பெண் என்பது பொருள்.

ஔவையார், மிக்க அநுபவசித்தி எய்தியிருந்தவராதலானும், மிகச்சிறந்த ஆசுகவியாதலானும், உலகியலுககு மிகவமைநத நீதிகளைப் பாடிவந்தனராதலானும், கவிராயர் புவிராயர் முதலான எல்லோராலும் பூசிக்கபபடடு வந்தார். ஔவை கம்பா எனனும் இருவரையும் வணங்கி நடபபா புகழேந்திப்புலவர். அரசனுக்கு உவாத்திமை நடததினவராதலானும, இயற்கையில் கல்விக்காய்ச்சலும் மாற்சரியமு முடையவராதலானும், ஒட்டககூத்தா, எவரையும் தம்மிற குறைந்தவராக எண்ணி, ஏனையருடைய கவிதாசாமார்த்தியத்தைப பொருட்டுசெய்யாமல இறுமாப் படைந்திருந்தார். கம்பர், புகழேநதியிடத்தில் விசுவாசங்காட்டி, ஒட்டரை இலக்கு செய்யாமல அரசனுக்குத தானும் அடங்காமல் இருந்தனர். கவிதா சாமாததியத்தில ஒட்டர் தாம ஏனையருககுச சிறிது தாழ்ந்தவா என உளளததினூடே நன்கறிந்தமையால, மாறசரியத்தால் பட்டினியாயப் படுத்துக்கொண்ட ஒருநாளிரவில் பாலும் பழமுமாகிலும் உடகொளளும்படிவேண்டிய தம்மனைவியிடத்தில நளவெண்பாவைப் பிழிந்த சாறறைததானும் விரும்புவதிலலை எனக்கூறினுரென்றும், கம்பா இறநதசெயதியைக் கேட்டவுடனே,

இன்றைக்கோ கம்ப னிறநதநா ளிப்புவியில்
இன்றைக்கோ என்கவிதை ஏற்குநாள்—இன்றைக்கோ
பூமடந்தை வாழப பொறைமடைந்தை வீறறிருக்க
நாமடந்தை நூலிழந்த நாள்.

என்றொருகண்ணால புலம்பி ஒரு கண்ணால் மகிழ்ந்தனரென்றும் கூறப்படுகின்றது. புகழேந்தியானவா இங்கிலீஷில கௌபா (Couper) கோல்ட்ஸ்மித் (Goldsmith) என்பார்களைப்போலச செம்பாகமான கவி. கம்பரோ கறபனுசக்தியிலும் வருணனையாற்றலிலும் மில்ட (Milton) னுக்குக குறைந்தவரல்லர். பிரபஞ்சவிலாசப் புலமையில் ஒருவாறு ஷேகஸ்பியரோடொத்தவர். யூரோப்பியர்களுடைய ஆதிகவியான ஹோமர (Homer) ருக்கு எவ்விதத்திலும் இளைப்பவரலலர். ஒட்டரோ ஸௌதே (Southey) முதலானவர்களைப் போல இரண்டாந்தரம் மூன்றாந்தரமான கவியென்று கொள்ளலாம். ஒட்டரும் கேவலம் அல்பமான கவி

அல்லராயினும், கம்பராகிய கதிரவன் முன்னே மின்மினியாகத் தோன்றினர்: புகழேந்தியான சந்திரன் முன்னே தாராகணங்களில் ஒன்றாகக் காணப்பட்டனர். இவர்கள் மூவரும் ஒவ்வொரு துறைப்பாடலில் மிக்க கைபோனவர்கள். வெண்பாவில் புகழேந்தியும், விருத்தப்பாவில் கம்பரும், கோவை-உலா-அந்தாதி பாடுவதில் ஒட்டக்கூத்தரும் இணையற்றவர்கள்.

**இவர்க்கு ஓதலான நூல்கள்.**—கம்பர் 11-வது நூற்றாண்டில் இருந்தவரென முன்னர்த் துணிந்தோமன்றே. ஆகவே அதுகாறும் வழங்கிவந்த நூல்களில் பற்பல இவர் கைக்கு எட்டியிருக்கக்கூடும். ஐம்பெருங்காப்பியம், ஐஞ்சிறுகாப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, பாரதவெண்பா முதலான சங்கச்செய்யுள்களும், மூவர்தேவாரம், திருவாசகம், திருக்கோவையார், திருத்தொண்டர் புராணம் முதலான சைவநூல்களும், நாலாயிரப் பிரபந்தமான வைணவத்திருமொழிகளும், தொல்காப்பியம், வீரசோழியம், யாப்பருங்கலம், காரிகை, இறையனாரகப்பொருள் முதலான இலக்கணங்களும் இவர் ஓதியிருக்கக்கூடிய நூல்களாம். இவர் காலத்திலே நாலாயிரப் பிரபந்தத்தின் வியாக்கியானங்கள் உண்டாகவில்லை. தொல்காப்பியத்திற்கு இளம்பூரணர், பேராசிரியர், கல்லாடர் என்பவர்களுடைய உரை கிடைத்திருக்கக்கூடும். சேனாவரையர் நச்சினார்க்கினியர் என்பாருடைய உரையைக்குறித்துத் துணிந்துசொல்ல இயல்கின்றிலது.

மேற்கூறிய நூல்களையும் உரைகளையும், கம்பராமாயணத்தையும் பற்பல கால் ஓதி முன்னவைகளைப் பின்னதோடும் பின்னதை முன்னவற்றோடும் ஒப்பிட்டுச் சற்றேறக்குறையக் கம்பர் இன்னின்ன நூல்களில் நன்குபயின்றவர் எனத் துணிதல் கூடும். இன்னின்ன நூல்களின் சாராமிசங்கள் இராமாயணத்தில் ஏறியிருக்கின்றன என்பதும் வெளியாகும். இது கல்விச்சுவை யறிந்தவர்க்கு இன்பமான பொழுது போக்காக இருக்கும். தமிழ் நூற்பயிற்சி குன்றி ஒருவாறு இங்கிலீஷ் பயின்று வயிறுவளர்ப்பதே பெரிதாக இருக்கின்ற இக்காலத்தில் இது செய்வது எம்போலியர்க்கு இலகுவான காரியமன்று. பெரியபுராணம் சிந்தாமணி முதலானவற்றில் இவர் நன்கு பயின்றனரென்பதும், திருக்குற

வினை வினை யெவற்றினும் சிறந்த அருமருந்தாகப் பருகினவர் என்பதும், பின் காட்டப்படுகின்றவைகளால் ஒரு சிறிது விளங்கும்.

கரும்பல்ல நெல்லென்னக் கமுகல்ல கரும்பென்னச்
சுரும்பல்ல குடைநீலத் துகளல்ல பகலெல்லாம்
அரும்பல்ல முலையென்ன அமுதல்ல மொழியென்ன

என்ற பெரியபுராண அடிகள்

தென்மலையல்லன திரைவருதரளம்
சொன்மலையல்லன தொடுகடலமுதம்
நன்மலையல்லன நதிதருநிதியம்
பொன்மலையல்லன மணிபடுபுளினம்.

என்ற இராமாயணச் செய்யுளுக்கு ஆதரவாகி யிருக்கலாம்.

வரம்பெலாமுத்தந்தத்துமடையெல்லாம்பணிலமாநீர்க்
குரம்பெலாஞ்செம்பொன்மேதிக்குழியெலாங்கழுநீர்க்கொள்ளை
பரம்பெலாமபவளஞ்சாலிபரப்பெலாமன்னம்பாங்கர்க்
கரம்பெலாஞ்செந்தேன்சந்தக்காவெலாங்களிவண்டீட்டம்.

என்ற இராமாயணப் பாடலுக்கு,

காடெல்லாங்கழைக்கரும்புகாவெல்லாங்குழைக்கரும்பு
மாடெல்லாங்கருங்குவளைவயலெல்லாநெருங்குவளை.

என்ற பெரியபுராண அடிகள் அடியாயிருக்கலாம்.

இனிச் சிந்தாமணியிலிருந்து மொண்டுகொண்ட அகப்பைகளிற் சிலவற்றை ஆராய்ந்து பார்ப்போம்.

“வெள்ளிவெண், கோனிறைத்தனபோற் கொழுந்தாரைகள் வானிறைத்து மணந்து சொரிந்தவே”

என்றார் சிந்தாமணியில:

“புள்ளிமால்வரைபொன்னெனநோக்கிவான்
வெள்ளிவீழிடைவீழ்த்தெனத்தாரைகள்”

என்றார் கம்பர்.

“கண்ணெனக்குவளையைக்கட்டலோம்பினார்
வண்ணவாண்முகமெனமரையினுள்புகார்”

என்ற சிந்தாமணி அடிகளை

பண்கள்வாய்மிழற்றுமின்சொற்கடைசியர்பரந்துநீண்ட
கண்கைகால்முகம்வாயொக்குங்களையலாற்களையிலாமை
உண்கள்வார்கடைவாய்மள்ளர்களைகலாதுலாவிநிற்பார்

எனக் கம்பர் சீர்செய்துகொண்டார்.

"பட்டவர்தப்பலிற் பரவையேந்தல்குல்
அட்டொளியரத்தவாயக் கணிகையல்லது
மட்டுடைமணமகண் மலர்ந்தபோதினல்
கட்டுடைக்காவலிற் காமாகனனியே."

என்ற சிந்தாமணிச் செய்யுளின் இறுதியடியின் கருத்தே

"அன்னமாமதிலுக் காழிமால்வரையை யலைகடல்சூழ்ந்தனவகழி
கனனியரல்குற் கூடமெனயார்க்கும் படிவருங்காப்பினதாகி"

என்ற இராமாயணச் செயயுளின் கருத்தாம்.

திருக்குறளில நின்றும் அநேக பாக்களையும் பாக்களின் கருத்தையும் பறபல விருத்தஙகளில் செருகிவைத்திருக்கின்றனர். "நல்லாறெனினுங் கொளறீதுமேலுலக, மில்லெனினு மீதலே நன்று" என்பதை "வெள்ளியையாதல &c." என்னும் வேள்விப்படலத்து விருத்தத்திலை "இன்னுயிரேனும், கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால்" என்றமைத்திருக்கினறது. "உதவாமலொருவன் செய்த உதவிக்குக் கைம்மாருக, முதவானையனையமைந்த மற்றுமுண்டாக வற்றே" என்ற கிட்கிந்தைப்படலச செய்யுளில "செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும், வானகமு மாற்றலரிது" என்ற குறட்கருத்தைப் பொதிந்து வைத்தார். "சிதைவகல்காதற்றுயை &c." என்ற விருத்தத்தில் "உதவி கொன்றாக்கென்றேனு மொழிக்கலாமுபாய முண்டோ" என்பது "எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டாம் உய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்ற குறளல்லவா? "ஊருணிநிறையவு முதவுமாடுயர், பார்கெழுபழுமரம் பழுத்தற்றாகவும்" என்ற மந்திரப்படலச செய்யுளில் "ஊருணிநீர்நிறைந்தற்றே" என்பதும் "பயன்மரமுள்ளூாப் பழுத்தற்றால்" என்பதும் எடுத்தமைக்கப் பட்டிருக்கின்றன. "எலியெலாமிப்படை அரவம்யானென" என்ற குகன்வாக்கு "எலிப்பகை நாகமுயிர்ப்பகெடும்" என்ற வள்ளுவர் வாக்கல்லவா? கிளைகண்டு நீங்குகின்றுழி "வன்றெறு &c." என்பதில் "ஒன்றுரைத்துயிரினும் ஒழுககம் நன்றென" என்பது "ஒழுக்கமுயிரினு மோம்பப்படும்" என்னுங் குறள்தானே? "வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ, மீண்டு முயலப்படும்" என்னுங்குறளை "வேண்டின வேண்டினர்க்களிக்கு மெய்த்தவம்" என அகத்தியப்படலத்தில்

எடுத்தாண்டனர். "உயர்ந்தவர்க்குதவிய் உதவியொப்பவே" என்ற உவமானம் "உதவிவரைத்தன் றுதவியுதவி, செயப்பட்டார் சால்பின் வரைத்து" என்றதுதானே? "மானநோக்கிற் கவரிமாவனைய நீரார்" என மந்திரிகளைக் கூறியது, "மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார், உயிர்நீப்பா மானம் வரின்" எனறகுறளை நினைந்தன்றோ? தசரதச்சக்கரவர்த்தியின் மந்திரிமார்களை வர்ணிக்கின்ற விடத்தில் 5 விருத்தத்திலே, திருவள்ளுவா 10 அதிகாரத்திற சொலலிய விஷயங்களினும் அதிகமாக எடுத்துரைத்திருககின்றனர். ஏனைக் கவிகளிற் பலர் கற்பனைமுதலானவற்றைக் கடன்வாங்கியுமென்? அவர்கள் கடன்வாங்கினதை விருத்திசெய்வது மிலலை; வாங்கினகடனைக் கொடுபபது மில்லை. இந்தக் கவிசசககரவர்த்திக்குக் கடன் கொடுத்தவர்களும் பெருமை யெய்தினர்; இவர் வாங்குகின்ற கடனும் கடனுகக் கட்புலனுவதிலலை.

தமிழ்ச்செய்யுள்.—கம்பராமாயணத்தின் முக்கியாமிசங்களை ஆராயுமுன்னர்த் தமிழசசெய்யுளின் குணுகுணங்களை ஆராய்ந்தறிதல் வேண்டும். தொல்காப்பியர் செயயுளிலககணத்தை "எழுத்துமுதலா வீண்டியவடியிற், குறித்தபொருளை முடியநாட்டல், யாப்பெனமொழிப யாப்பறிபுலவா" எனக கூறினா. பவணந்திமுனிவா "பல்வகைத்தாதுவி னுயிாக்குடலபோற்பல, சொல்லாற் பொருட்கிடனுக வுணாவினின், வலலோரணிபெறச் செய்வனசெய்யுள்" எனக்கூறினர். பவணந்திகாட்டிய உவமையால் ஒரு விசேஷம் உண்டு. அஃதென்னெனின், உயிரிலலாவிடின் உடல பிணமேயாம். அசையுஞ் சீரும் அடியும் முதலிய உறுப்புக்கள் அமைநதுகிடப்பினும் சத்தில்லாவிடின் செய்யுள் சாரமறறதாகும். மாறனலங்காரமுடையார் கவிபாடுந்திறனெய்தவிரும்புவார்க்கு,

"பாவினையொலிபெறப் படனஞ்செய்திடும்
நாவினனுகி நாற்கவிப்புலவோர்
புதுமொழிபுணர்ப்புழிப் பொறிப்பவனுகியும்
மனப்படுமொருபொருள் மதித்தவரொருமொழி
எடுத்துரைத்தற்கியைபுற வெதிரெதிர்பன்மொழி
தொடுப்பதும்பெயர்வினை கோப்பணப்பிறிகட

தொடுப்பதுந்தொடைபல தொடர்ந்தொருபாவாய
முடிப்பதுங்குறிக்கொளன் முதற்காரணமே." என்றும்
"சொற்பொருளணிநலன் றேயாதாயினும்
மடியாதெடுத்தடி மடக்குதலின்றாய
யாப்பினதுறுப்பிழுக் காதிறுதியில்வினை
கோப்புணமுடித்தலதன்முதற்குறிப்பே" என்றும்
"அருமணிநிரலவைத் தன்னசொனனலன
ஒளியதனுடைசிறந் தன்னபொருணலன
அழகததகைாஙகமை ரன்னஅணிநலன
உரனுடைப்பழம்பாட் டுணாவழியுணர்நதோர்
உரனுடைப்பாட்டுணர் வாயமையின்வருமே"

என்றுங் கூறியவற்றைப் பார்த்தால் காரிகைகற்றவரெல்லாம் கவிபாடலாமே எனத தோன்றுகின்றது. முற்காலத்துக கவிக ளெல்லாம், பிரபஞ்சவிலாசத்தை ஒட்டித தாங்கள் கூற விரும் புமபொருள மனதில் ஊன்றிப்பதியுமபடி வமைபுறுத்திக கூறினா. இக்காலத்துக் கவிகள் தாஙகள் கூற விருமபியபொருளை யாதொ ருபொருட்டு செய்யாது, தாங்கள பாடுகின்ற கவிகள் யாப்பிலக் கணததுக் கிணைந்திருக்கின்றனவா என்றும் நன்னூலிற் கூறிய சந் தியிலக்கணமும் சொல்லிலக்கணமும் தஙகள் கவியில சரியாக அமைந்திருககின்றனவா என்றும் கவனிக்கின்றனர். தற்காலத்துக் காவியங்கள தண்டியலஙகாரத்துக் கூறிய காவியலக்ஷணம் நன் கமையபபெற்றவைகளே. ஆயினும் முற்காலத்துக் காவியங்களி ன் அழகும் ஆழமும் இங்கே கிடைக்கவேமாட்டா. முற்காலத் துக் கவிகள் சரிதத்தையும் காட்சிகளையும் உள்ளதை உள்ளபடி யே கூறினவர்கள்: இக்காலத்துக் கவிகள் இல்லதை உள்ளபடியே கூறுவர். இவர்களிடத்தில் பஞ்சபூதங்களும் நடுங்கும். இவர் களைக் கண்டால் ஆகாசம் பூமிககு வந்துவிடும்; பூமி ஆகாசத் துக்குப் போய்விடும். அவர்கள நிறைகுடங்கள்; இவர்கள் அரை குடங்கள். முற்காலத்துக கவிகள் பொருட்சுவையறிந்தவர்கள்; இக்காலத்துக் கவிகள் சொற்சுவை ஒன்றுமே அறிந்தவர்கள். கம்பர் பொருட்சுவை சொற்சுவையாகிய இரண்டையும் நன்கு சுவைத்தவர். உள்ளதை உள்ளபடி கூறும் குணமுடையவர்: இல் லதை உள்ளதாகவும் உள்ளதை இல்லதாகவுங் கூறுங் குணமு முடையவர். இவர் கவியில் இலககண அமைதியுமுண்டு; அழ

கும் ஆழமுமுண்டு. கூற விரும்பும்பொருளைப், பசுமரத்தில் அறைந்த ஆணிபோல, மனத்தில் அழுந்தும்படி நன்கு கூறுவர். முற்காலத்துக் கவிகட்கும் இக்காலத்துக் கவிகட்கும் இடைநின்றவராதலின், கம்பர் முன்னோர்களுடைய சிறப்பும் பின்னோர்களுடைய குறைபாட்டில் ஒரு கூறும் உடையவராயிராநின்றார். கோதாவரி நதியை வருணிக்கின்ற இடத்தில

"புவியினுக் கணியா யான்ற பொருடந்து புலத்திற் றாகி
அவியகத் துறைகள் தாங்கி யைந்திணை நெறியளாவி
சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமுந் தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடந்த கோதாவரியினை வீரர் கண்டார்."

எனக் கவிலக்ஷணத்தை ஆற்றின்மேலேற்றிக் கூறியிருக்குமாற்றானும், பம்பைப்பொய்கையை வருணிக்குமிடத்தில் "கற்பகமனைய வக்கவிஞர் நாட்டிய சொற்பொருளாமெனத் தோன்றல் சான்றது" எனக் கூறியிருக்குமாற்றானும் கம்பர் கருத்திற்கொண்ட கவிபாவம் இனைத்தென வறியலாகும். (Burns) பர்ன்ஸ் என்னுங் கவியைப்போற் கொதிப்பும், (Chaucer) சாஸர் என்னுங் கவியைப்போற் றெளிவும் உடைய தமிழ்க்கவியைக் காண்டல் அருமையே. கம்பர் மில்டனை ஒத்தவர் என்பதில் ஐயமில்லை; ஷேக்ஸ்பியரை ஒருசார் ஒத்தவர் என்பதிலும் ஐயமில்லை. ஓவியன் பல வர்ணங்களின் உதவியைக்கொண்டு தனதிறத்தால் தான் சித்திரிக்கின்ற சித்திரமானது பலர்மனத்தையுங் கவர்கின்றவாறுபோலக், கவிஞன் பலசொற்களின் உதவியைக்கொண்டு தன் நுண்ணிய அறிவால் தான் யாக்கின்ற யாப்பானது கற்றவர்மனத்தைக் கவரச்செய்யுமன்றே? இங்ஙனஞ் செய்யலாகும் இந்த மர்மத்தைக் கண்டறிந்த கவிராயர்களுள் கம்பரே கவிச்சக்கரவர்த்தியாவர். ஆயினும் அவருடைய பாட்டுடைத்தலைவர் மானிட உருவங்கொண்ட முழுமுதற் பொருளாதலானும் பத்துத்தலையும் இருபதுகையும் உடையனாய்க் கைலையைத்தானும் கையிற்பந்தாக எடுக்கவல்ல இராவணனைச் சங்கரித்து இராக்ஷதரைக் கருவறுக்கும் பொருட்டே அம்முழுமுதற்பொருள் திருவவதரித்ததெனக் கருத்திற்கொண்டவராதலானும், கம்பர் பிரபஞ்சநாடகத்தின் எல்லையைக் கடந்தும் போவாராயினர். மானுடசம்பந்தமுடைய சந்தர்ப்பங்களில் இராமர் மனிதராகவே நடித்தலான், கம்பர் அன்னசந்தர்ப்பங்களி

ல இராமனைப் பிரபஞ்சகர்த்தனாகத் துதித்தியே பிராகிருத விரோதமின்றிப் பாடுவார். நிருதரெதிர்ப்பட்டால இராமரும் நிலங்கடந்த நெடுமுடியண்ணலாதலால், கம்பரும், அன்ன இடங்களில் அப் பிராகிருத பாவமாகவே பாடுவர். இவ்வுருக்கற்பனைக்காகக் கம்பரை வெறுப்போமாயின் வான்மீகரையும் வெறுப்பவராவோம். “பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும் பத்தர் சொன்னவும் பன்னப்பெறுபவோ” எனக்கம்பர் அங்கங்கே தமக்குப் பத்திரமான பாதுகாப்பை அமைத்துக்கொண்டனரன்றோ?

**இராமாயணத்தின் ஒருபுடை ஆராய்ச்சி**—இயந்திரத்தைப் பிரித்துப் பார்த்தவர்களே அதன் கட்டுக்கோப்பை நன்கறிவார்கள். உறுப்பிலக்கணங்களை நன்கறிந்தவர்களே யாப்பிலக்கணத்தை நன்கறிபவராவர். மனத்தின் விகற்பங்களை நன்கறிந்தவர்களே மனோதத்துவத்தை நன்கறிந்தவராவர். கவிகளைப் பன்னிப்பன்னிப் படித்தவர்களே கவிலக்ஷணத்தை நன்கறிந்தவராவர். ஆதலால் நாமும் கம்பர் சொல்லைக் கேளாமல் அவர்கவிகளை ஒருவாறு பன்னிப்பார்ப்போம். கம்பர் அடைகளையும் உவமைகளையும் ஒன்றின்மேலொன்றாய் அடுக்கிக்கொண்டு போதலால், கருத்துமறைபட்டுக், கதையும் இடையிட்டு மறந்துபோகின்றது, என ஒரு இங்கிலீஷ் ஆசிரியர் கூறுகின்றனர். வரைக்காட்சி - பூக்கொய்தல் - நீர்விளையாட்டு - படையெழுச்சி - உயுத்தம் - கைக்கிளை - பெரும்பொழுது முதலானவற்றை வர்ணிக்கின்ற இடங்களில் கருத்துமறைபடுவதும் கதை இடையிட்டு மறந்துபோவதும் உண்மைதான். ஆனால் கம்பர் அரசருடனிருந்து உள்ளும் புறம்பும் நன்குபழகினவராதலாலும், தமிழ்நாடுமுற்றும் காடும் மேடும் நாடும் நதியும் மலையும் மற்றவும் திரிந்துழன்றவராதலாலும், எந்தக் காட்சியும் விரித்தெடுத்துரைப்பது அவர்க்குச் சற்றும் பிரயாசமாகத் தோற்றுவதில்லை. தற்குறிப்பேற்றி உண்மைகளை விளக்குவது அவருக்கு இளைப்பைத் தருவதில்லை. ஆகவே யாதொருகதை இடையீடுபடுகின்ற காட்சிகளை வர்ணிக்குமிடங்களில் நாடோறும் நாலைந்து பாட்டாகப் படிக்கின்றவர்கள் இராமாயணசாரத்தை நன்கு கிரகிக்கமாட்டார்கள். ஒருமூச்சிலே ஐம்பதும் நூறுமாகப் படிக்கின்றவர்களுக்கே இராமாயணத்தின் அருமைதெரியும். மலையின்மீதிருந்து கண்டநுபவிக்கின்ற காட்

சியை மலையடிவாரத்திலிருந்து கண்டநுபவிக்கலாகுமோ? கம்ப ராமாயணத்தைக் கத்தியபாகமாக ஓதுகின்றவர்கள் தானும் யாதொருபடலத்தை முற்றும் படித்தாலன்றிப் பயனெய்துதலிலா.

கம்பராமாயணங் கற்பதில எப்படிபபட்டவாகளும் இடர்ப்படும் இடங்களுண்டு. அவை கம்பசூததிரம் என்னப்படட இடங்களாம். சூத்திரத்தின் மர்மத்தை அறிநத சூத்திரதாரிக்கு இடரொன்றுமிலலை. இந்தச சூத்திரங்களைச சில பரம்பரைவித்வான்கள் மாத்திரமே அறிவர். இந்தச சூத்திரங்களில எப்படிப்பட்டவர்களையும் மாட்டிவைத்து இவர்கள் பெருமலைவுசெய்வர். இப்படிப்பட்ட சூத்திரஙகளின் மாமமாவதுதான் என்னவோ எனின்:—இலககணததோடு பொருநதாத முடிபுகளும் அகராதி கொண்டறியாத அாததபபிரயோகஙகளுமேயாம. இப்படிப்பட்ட முடிபுகளையும் பிரயோகங்களையும் கமபர் உள்ளக்கருத்துடனே வேண்டுமென்றே வழஙகினாரல்லா. தாம்பாடுகின்ற விஷயத்தில் மாத்திரமே சிந்தனைவைதது நாளொன்றுக்கு 600, 700 விருத்தங்களாக விரைந்துபாடிச செல்கையில் சிற்சில சந்தர்ப்பங்களில் இப்படிப்பட்ட பிரயோகஙகளும் முடிபுகளும் தம்மையறியாமலே அமைந்துவிடும். இவா காலத்திலே தானே இப்படிப்பட்டவைகளை அவர் சிக்கறுத்ததைக் கொண்டு, பிற்றைநாள் புலவர்கள் பொருளறிவாராயினர். இந்த மர்மத்தையறிந்த ஆசிரியர்கள் நாட்குநாள் அருகிவருதலான் இவைகளைப் பலர்கூடித் திரட்டி வெளிப்படுத்தாவிட்டால இராமாயணத்தில் அநேக செய்யுள்கள் இருந்தும் இல்லனவாகிவிடும். இராமாயணம் படிக்கின்றவர்களுககு வேறுவிதமான பொழிப்புரைகளும் அகலவுரைகளும் வேண்டா. கம்பசூததிரஙகளை விளக்கும்படியான சாதனத்தை மாத்திரம் தேடிக்கொண்டால், தமிழ் மாணாக்கர்களுக்குக் கம்பராமாயணம் மிகநல்ல காலக்ஷேபமாகும்.

கம்பர் ஆங்காங்கு எடுத்துக்காட்டும் உவமானங்கள் மிகப் பொருந்தினவைகளாகவும் கம்பீரமுடையவைகளாகவும் ஒருசார் ஒழுக்கம் கற்பிப்பனவாகவும் இருக்கின்றன. தசரதன்,

"வையகமுழுவதும்வறிஞனோம்புமோர்
செயயெனக்காத்தினிதரசுசெய்கின்றான்."

தாடகை நெஞ்சை ஊடுருவிசென்ற இராமபாணம்

"புல்லர்க்கு நல்லோர்சொன்ன பொருளெனப் போயிற்றன்றே."

தசரதன் தான் காட்டுக்குப்போகவும் இராமனுக்குப் பட்டங் கட்டவும் வேண்டுமென்று கூறினதைக் கேட்ட அமைசசர்கள்,

"இரண்டுகன்றினுக்கிரங்மோராவெனவிருந்தார்."

பதினான்கு வருஷகாலங் காட்டில் வதிவாயாக எனக் கைகேசி சொன்னதைக் கேட்டபோது ஸ்ரீராமன் முகம்

"அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா."

சந்திரசைலத்தின் அடிவாரத்தில் தசரதன் செல்லும்போது

"தெருண்டமேலவர்சிறியவர்ச்சேரினுமவாதம்
மருண்டதன்மையைமாறுவரெனுமிதுவழக்கே
உருண்டவாயதொறும்பொனனுருளுரைத்துரைத்தோடி
இருண்டகல்லையுந்தந்நிறமாக்கியவிரதம்."

அம்மலை யடிவாரத்தில படுத்தெழுந்தபோது

"தீயவரொடொன்றியதிறத்தருநலத்தோர்
ஆயவரையந்நிலையறிந்தனர்துறநதாங்
கேயவருநுண்பொடிபடிந்தடனெழுந்தொண்
பாயபரிவிரைந்துதிறினறனபரநதே."

கம்பரிடத்தில் ஏனைக்கவிராயர்களைக் காட்டில் விசேஷித்த சாமர்த்தியம் ஒன்றுண்டு. ஒரோவோர் கவியில் யாதொரு சொல், தன்னாற்றலானன்றிக, குறிப்பால வெகு சாதுரியமான பொருள்களையும் இனமான அநேக பொருள்களையும் அற்புதமான நயத்தையும் துவனிக்கும்படி செய்தலாம.

விராதன் துதியில்

"கடுத்தகராங்கதுவநிமிர்கையெடுத்துமெய்கலங்கி
உடுத்ததிசைஅனைத்தினுஞ்சென்றொலிகொள்ளஉறுதுயரால்
அடுத்தபெருந்தனிமூலத்தரும்பரமேபரமேஎன்
றெடுத்தொருவாரணமழைக்கநீயோவன்றேனென்றாய"

என்ற செய்யுளில் ஏன் என்ற ஒருசொல்லில் என்னநயம் துவனிக்கின்றது பாருங்கள். காட்டைவிட்டு நீங்கிவந்து அரசியலை யேற்றுக்கொள்ளும்படி வேண்டின வசிட்டரைநோக்கிச் சீராமன்

"தேன்றருமலருளான்சிறுவசெய்வெனென்
றேன்றபின்அவ்வுரைமறுக்குமீட்டதோ"

என்றவிடத்துச் சிறுவ என்பதில் துவனிக்கின்ற சாதுரியத்தை நோக்குங்கள். இராமன் காட்டுக்குப் போகவேண்டா; பரதன் அரசியல் நடாத்தத்தடையில்லை எனக் கைகேசியிடத்துத் தசரதன் உரைக்கின்றவிடத்து,

"மண்ணேகொணீமற்றையதொன்றுமறவென்றான்"

என்பதில் புதைபொருளைக் கவனியுங்கள். ஜனகமகாராசனிடத்தில் விசுவாமித்திரர் ஸ்ரீராமனுடைய குலமுறையைக் கிளத்துகின்ற இடத்தில்

"கோதமன்றன்பன்னிக்குமுன்னையுருக்கொடுத்திவன
போதுநின்றதெனப்பொலிந்தபொலன்கழற்கால்பொடிகண்டாய்"

என்று கூறுகையில் பொடி என்பதில் விசேஷமமைந்திருக்கிறது காணுங்கள். சிற்சில இடங்களில் உருவகங்களை வெகுநயமாக அமைப்பர். உ-ம்.

"சாளரத்திங்கடொறுந்தோன்றுவதாமரைபலகா."

"பத்திரகிரிமுவாயமமுகத்தாலெழுதிநீட்டிய
விக்கிரமிவையமற்றேறி."

"வெம்பிறைவாக்காவிட வேர்முதலறுப்பான்
மகன்னன் மருமகன் எனநீங்கணிவிப்பான்."

"துலங்குநாளவளமசமச்சநாளைழுயில்
பலனுயானக்கூப் பந்தியாயினேனே."

பல இடங்களிலும் தமது கருத்தை மிகநன்றாக உள்ளத்திற் பதியும்படி சமத்காரமாகக் கூறுவர். இராமன் காட்டுக்குப் போனால் நான் உயிர்துறப்பேனென்று தசரதன் கைகேசியிடம் உரைக்குமிடத்தில்,

"உன், கழுத்தின்ஞாணுனமகற்குக் காப்பின்ஞாணுமென்றான்"

பின் இராமனை நினைத்துப் புலம்புகின்றவன்,

நின்மேற்சொரிய, மண்ணும்நீராயவாத புனலைமகனேவினையேற
குண்ணும்நீராயுதவி யுயர்கானடைவாய்என்றான்

ஸ்ரீராமனது வில்லாற்றலைக் கூறுமிடத்து,

"மாலுமக்கணம்வாளியைத்தொட்டதும்
கோலவிற்காலகுனித்ததுங்கண்டிலர்
காலனைப்பறித்தக்கடியாள்விட்ட
சூலமற்றனதுண்டங்கள்கண்டனா"

"தடுத்திமையாமலிருந்தவர்தாளின
மடுத்ததுநாணுதிவைத்ததுநோக்கார
கடுப்பினின்யாருமறிந்திலர்கையால்
எடுத்ததுகண்டனரிற்றதுகேட்டார."

வாலியானவன் தன்னை வதைத்தது ஸ்ரீராமன் என்பதறிந்தபோது

"வாய்மையுமரபுங்காத்து மன்னுயிர்துறந்தவள்ளல்
தூயவன்மைந்தனேநீ பரதன்முன்றோன்றினையோ." என்றான்.

பஞ்சவடியை அணுகும்போது கோதாவரியின் கரையே சென்ற இராமனும் சீதையும் நலம்புனைந்துணர்த்தும் நயத்தைக் காணுங்கள்.

"நாளங்கொள்நளினப்பள்ளிநயனங்கள்அமையநேமி
வாளங்களுறைவகண்டுமடந்தைதன்நாயகைநோக்கும
நீளங்கொளரிலையோன்மறைநேரிழைநெடியநம்பி
தோளின்கண்மனமனையதானைக்காமணித்தடங்கள்கண்டாள."

"ஓதிமமொதுங்கக்கண்டஉத்தமனுழையளாகும்
சீதைதனடையைநோக்கிச்சிறியதோர்முறுவல்செய்தான்
மாதவளதானும்ஆண்டுவந்துநீருண்டுமீளும
போதகமநடப்பநோக்கிப்புதியதோர்முறுவல்பூத்தாள்."

"வில்லியல்தடக்கைவீரன்வீங்குநீராற்றினபாங்கர்
வல்லிகள்நுடங்கக்கண்டானமங்கைதனமருங்குல்நோக்க
எல்லிபங்குவளைக்கானத்திடையிடைமலர்ந்துநின்ற
அல்லியங்கமலங்கண்டாளஅண்ணல்தனவடிவுகண்டாள்."

இனி உடனே இவர்கள் பிரியும்படி நேரிடுகின்றதறுவாயில் இங்ஙனம் உரைத்தது எவ்வளவு பொருத்தமும் மனவுருக்கமுங் காட்டுகின்றது பாருங்கள்.

அந்தந்தச் சந்தர்ப்பத்திற்கு ஏற்பக் கம்பர் தம்முடைய குறிப்பை ஏற்றிச்சொல்வது மிகவும் வியக்கத்தக்கதாக இராநின்றது. ஒரு உதாரணங்காண்போம். கைகேசி தன்கணவனை இன்னல்படுத்திய இரவு புலர்கையில்,

"சேணுலாவியநாளெலாமுயிரொன்றுபோல்வனசெய்துபின்
ஏணுலாவியதோளினானிடரெய்தவொன்றுமிரங்கிலா
வாணிலாநகைமாதராள்செயல்கண்டுமைந்தர்முனிற்கவும்
நாணினாளெனவேகினாள்நளிர்கங்குலாகியநங்கையே."

"எண்டருங்கடைசென்றயாமம்இயம்புகின்றனவேழையால்
வண்டுதங்கியதொங்கல்மார்பன்மயங்கிவிம்மியவாறெலாம்
கண்டுநெஞ்சுகலங்கியஞ்சிறையானகாமர்துணைக்கரம்
கொண்டுதம்வயிறெற்றியெற்றிவிளிப்பபோன்றனகோழியே."

"சிரித்தபங்கயமொத்தசெங்கணிராமனைத்திருமாலைஅக்
கரிக்கரம்பொருகைத்தலத்துயர்காப்புநாணணிதற்குமுன்
வரித்ததண்கதிர்முத்தமாகியிம்மண்ணைதாங்கிழற்றமேல்
விரித்தபந்தர்பிரித்ததாமெனமீனொளித்தனவானமே."

கம்பர் ஓரோவிடத்து இரட்டுறமொழிவர். சீதையின் அழகை இராவணனிடம் வாணித்தவுடனே, சூர்ப்பநகை அவனை நோக்கி உரைத்ததாக உரைத்த மூன்று செய்யுள்களில் ஒவ்வொன்றின் ஈற்றடியையும் தமிழாசிரியர்கள் இரட்டுறமொழிதலாக முதலில் விளக்கும்போது நமக்குண்டாகும் உவகை உள்ளடங்குவதன்று.

இந்திரன்சசியைப்பெற்றானிருமூன்றுவதனத்தோன்றன
தந்தையுமையைப்பெற்றான்தாமரைச்செங்கணானும்
செந்திருமகளைப்பெற்றான்சீதையைப்பெற்றாயநீயும்
அந்தரம்பார்க்கின்நன்மையவர்க்கிலையுனக்கேயையா."

என்பதின் இறுதியடி, முடிவாகப்பார்த்தால் அவர்க்கெல்லாம் நன்மையில்லை; உனக்கே நன்மையுண்டு; அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பெண்பாலை அடைந்துபெறும் இன்பம் இன்பமன்று; நீ இவளை யெய்தியடையும் இன்பமே இன்பமாமென்றும், அவர்க்கே நன்மை (உண்டு); உனக்கு இல்லை என்றும் இரண்டு விதமாகப் பொருள்படுகின்றது.

"பாகத்திலொருவன்வைத்தான்பங்கயத்திருந்தபொன்னை
ஆகத்திலொருவன்வைத்தானந்தணனாவில்வைத்தான்
மேகத்தின்மின்னைமின்னேயென்றநுண்ணிடையைநீயும்
மாகத்தோள்வீரபெற்றாலெங்ஙனம்வைத்துவாழ்தி."

இதில 'எங்ஙனம்வைத்து வாழ்தி' என்பது நீ அவளை யாண்டு வைத்து வாழ்வாய்? என்றும், நீ அவளைப்பெற்றால் (எங்ஙனம் வாழ்தி) வாழாயே! என்றும் இருகிறப்படுகின்றது. இங்ஙனம் இவ்விரண்டிடத்தும் இரட்டுறமொழிந்தது செம்மொழிச்சிலேடையுமன்று பிரிமொழிச்சிலேடையுமன்று: அவ்வவ்வடியை இ

யைவுற எடுத்தும் படுத்தும் "எழுத்தியறிரியாப் பொருடெரிபுண ர்மொழி, இசைத்திரிபாற்றெளி வெய்துமென்ப" என்கிறபடி இ சையறுத்துச்சொல்லும் வேறுபாட்டினளவினதேயாகும்.

"பிள்ளைபோல்பேச்சினாளைப்பெற்றபின்பிழைக்கலாற்றாய்
கொள்ளைபோகின்றசெல்வமவளுக்கேகொடுத்தியைய
வள்ளலேயுனக்குநல்லேனமற்றுநின்மனையில்வாழும்
கிள்ளைபோன்மொழியார்க்கெல்லாங்கேடுசூழ்கின்றேனன்றோ."

என்பது, சீதையை நான் உனக்கு இசைவித்தலால் உன்னுடன் இன்பமெய்தப்பெறாது வருந்துவாராதலின் உன் மனைவிமார்களுக் குக் கேடு சூழ்கின்றேனாகிறேன் என்பது இதன் பொருள். கற்புடையவளான சீதையை நீ தீண்டின் (இறந்துபடுவை), அத னால் அவர்கள் மங்கலசூத்திரம் இழப்பர் என்னும் பொருளும் ஈண்டு துவனிப்பது காண்க.

நாடக கவிகளைப்போல காப்பியககவிகளும் தந்தந் சந்தர்ப் பத்துக்கியைந்தவாறு, காவியபாத்திரங்களின மனநிலையையறிந்து கவிகளையியைப்பதே பொருட்சுவை சிறக்குமுபாயமாம். கம்பர் மனுஷப்பிரகிருதியை நன்கறிந்தவர் என்பது இராமாயணத்தில் பல்லிடத்தும் புலனாகின்றது. சூர்ப்பநகை சொல்லளவாக உ ரைக்கக்கேட்ட இராவணன் சீதையின் சௌந்தரியலகரியின் மூழ்கியிருக்கையில் காணும் உருவெளித்தோற்றப் பகுதியை ஆ ராய்ந்து பார்ப்போம்.

ஒருபொருளை நேரிற் கண்டவர்கள், பின் நனவில் கருதும் போது அதனைக்கண்டது கண்டவாறே சித்திரித்துக்கொள்ளக் கூடும்; கனவில் தோன்றினும் அப்பொருள் கண்டதுகண்டபடி யே தோன்றும். நேரில்காணாமல் ஒருவர் உரைப்பக்கேட்ட பொ ருள், கேட்ட உரையின் உதவியால் ஒருவாறு மனத்தில் சித்திரித் துக்கொள்ளக்கூடுவதே யன்றி, உள்ளது உள்ளபடியே தோன் றுவதில்லை.

"அம்பும்மனனுநுழையாக்கனவந்தகாரத்
தும்பர்மழைகொண்டயலொப்பரிதாயதுப்பின்
கொம்பர்குரும்பைக்குலங்கொண்டதுதிங்கடாங்கி
வெம்புந்தமியேன்முன்விளக்கெனத்தோன்றுமன்றே."

"மருளூடுவந்தமயக்கோமதிமற்றுமுண்டோ
தெருளாதிதெனஞேதிணிமையிழைத்தாலுமொவ்வா
இருளூடிருகுண்டலங்கொண்டுமிருண்டநீலச்
சுருளோடும்வந்தோர்சுடர்மாமதிதோன்றுமன்றே."

"புடைகொண்டெழு . . . . . . . . . . . . . . . . . . .
இடைகண்டிலமலலெல்லாவுருவுநதெரிநதாம்
விடநுங்கியகண்ணுடையாரிவாமெல்லமெலல
மடமங்கையராயென்மனத்தவராயினுரே."

இம்மூன்று செய்யுளும் இராவணன் கண்ட உருவெளித்தோற்றம். மூன்ருவது செய்யுளில "மெல்லமெல்ல, மடமஙகையராயென் மனததவராயினுரே" என்றிராவணனுரைககும் உரையின உள ளுறையை உளளுறநோககுமிடத்து, சூர்ப்பநகை காடடிய உவ மானஙகளால் உவமேயஙகளை ஒன்ருெடொலருகய பொருத்தி இராவணன கருத்திலமைத்துககொண்ட உருவமே ரண்டு வெ ளித்தோறறமான சீதையின உருவென்பதும், இஙகே சீதையின வர்ணனே பிரத்தியக்ஷபாவனையைத் தருவதினறெனபதும இச செய்யுள்களை மேலோடடாக ஓதுவாாககும நன்குபுலபபடும. இஙஙனந் தான்கண்ட உருவம் சீதையோ? அனறே? எனறையுற றவன், சூர்ப்பநகையை அழைத்து, "இநநினறவளாஙகொல இயம்பியசீதை"? என்று கேடக, இராமானந்தபரவசையான அவ ள், இராவணன் கேட்கின்ற நோக்கத்தையறியாது தனனையுமறந் து, தனககு உருவெளிததோற்றமாக,

"செநதாமரைக்கண்ணெடுஞ்செங்கனிவாயினேடும்
சந்தார்தடநதோளொடுநதாழதடக்கைகளோடும்
அந்தாரகலதெதாடுமஞ்சனக்குனறமெனன
வந்தான்இவனுகுமவவல்விலிராமனெனருள்."

இவள் இராமனை நேரிறகண்டவளாதலின் இவளுக்குப்புலனுன உருவெளித்தோற்றத்தின வாணனை இராமனது உருவபபடததை எதிரில்வைத்துக காடடினுறபோல இராநின்றது. இஙஙனம இ ராவணன் நேரில்காணுத சீதையின் உருவெளிததோறற வாண னையை ஏற்றபெற்றி மஙகலாகவும், சூர்பபநகை நேரிற்கண்ட இராமனது உருவெளித்தோற்றததை ஏறறபெறறி பிரததியக்ஷபா வமாகவும் அமைத்திருக்கு மிஃதொன்றுமே கம்பநாடா மகாகவி என்பதற்குப் போதியசான்ருகும்.

**கம்பரும் வால்மீகியும்.**—இங்ஙனமாகக் கம்பராமாயணத்தின் அழகுகளையும் நயங்களையும் எடுத்துக்காட்டுவது எப்படிப்பட்டவர்களுக்கும் இலகுவான காரியமல்ல. அழகு நிறைந்திருக்கின்ற இடத்திலே தனித்தனியான கூறுகளின் அழகை எடுத்துக்காட்ட இயலுமோ. ஆனாலும் கம்பராமாயணம் வால்மீகி ராமாயணத்தின் ஆதாரத்தைக்கொண்டு பாடினதுதானே இதற்கென்ன ஏற்றமுண்டு எனச் சிலர் கூறுவர். இரண்டையும் படித்துப் பார்த்தவர்களே இதற்குச் சமாதானங்கூறத் தகுந்தவர்கள். கால்ட்வெல் என்னும் அத்தியக்ஷர் "ஹோமருடைய இலியட்டுக்கும் போப்பினுடைய இலியட்டுக்கும் என்னபேதமோ அதேபேதம் வால்மீகிராமாயணத்துக்கும் கம்பராமாயணத்துக்கும் உண்டு" எனச் செப்பியிருக்கிறார். பௌவர் என்னும் அத்தியக்ஷர்- "நாம் வால்மீகிராமாயணத்தையும் படித்திருக்கிறோம்; கம்பராமாயணத்தையும் படித்திருக்கிறோம். வால்மீகிமுனிவர், விரிவாய்க் கூறுகின்றவராயினும் விளங்கக் கூறுகின்றவர்; கம்பர், சில இடங்களில் சுருங்கக் கூறுகின்றவராயினும் சில இடங்களில் விஸ்தாரமாய்க் கூறுகின்றவர். இன்பந்தருவனவான சொற்பிரயோகங்களும் அலங்காரமான கற்பனைகளும் ஆங்காங்கு விசேஷமாயிருக்கின்றன. ஆயினும் வால்மீகியை வியந்து கூறுவதோ கம்பனையே உவந்து கூறுவதோ எனத் துணிதல் கூடாமல் இடர்ப்பட்டோம்" என்றெழுதியிருக்கிறார். வடமொழிப் பயிற்சி இல்லாதவர்களும் வால்மீகிராமாயணத்தின் நேரான இங்கிலீஷ் மொழிபெயர்ப்பை எதிரில் வைத்துக்கொண்டு ஒத்திட்டுப்பார்த்தால் கம்பரும் சாமானியரல்லர் என்பதும் கதையளவாக மாத்திரமே வால்மீகிராமாயணத்தைத் தழுவினவர் என்பதும் அங்கைக்கனியாகும். வால்மீகிராமாயணத்தின் பாலகாண்டத்தின் முதலிலுள்ள பாகமெல்லாம் பிற்பட்ட வடமொழியாசிரியர்களால் ஏற்றப்பட்ட சுலோகங்கள் என்று அநேக இங்கிலீஷ் ஆசிரியர்கள் யூகிக்கின்றார்கள். இப்படிப்பட்டவைகளைக் கம்பர் தழுவினாரல்லர். வால்மீகி ராமாயணத்தில், தசரதன் பிள்ளைப்பேறடையும்படி என்ன செய்யலாமெனத் தன் மந்திரிமார்களைக்கூட்டி ஆலோசனை செய்ததாகவும் அவர்களும் அந்த யாகத்தைச் செய்யலாம் இந்த யாகத்தைச் செய்யலாமென்று பலபடப்பேசினதாகவும் அதன்மேல் சுமந்

திரன் தான் சனற்குமாரமகரிஷியினிடம் கேட்ட மர்மத்தை அரசனிடம் அந்தரங்கமாய் உரைத்ததாகவும் அதன்மேல் அரசன் கலைகோட்டு மகாமுனிவர் வரத்தக்கதென்றறிந்ததாகவும் உரைத்திருக்கிறது. "பிள்ளைப்பேறிலலையே இனி நாடென்றுகும்" என்ற தயரதனை நோக்கி வசிட்டர் தேவரகசியத்தை மனத்தில சிந்தித்துக் கலைகோட்டு முனிவரை அழைத்துப் புத்திரகாமேஷ்டியாகம் பண்ணினால் புத்திரப்பேறுண்டாகுமெனக கூறினதாய்க் கம்பராமாயணத்தில் சுருக்கி இன்றியமையாத அளவாகக் கூறப்பட்டிருக்கின்றது. வால்மிகத்தில வருகின்ற கலைக்கோட்டுமுனிவர் சாதாரணராகக காண்கின்றனா. கம்பருடைய கலைகோட்டுமுனிவரை நினைக்கும்போதே அசசமும அற்புதமும் மனத்தில உதிக்கின்றன. ஜனகமகாராசன் தயரதனுக்குத் தூதுபோகின்றது முதல் பரசிராமரைக் கண்டவரையில நிகழ்ந்த சரிதம் வால்மீகத்தில மிகச் சுருக்கமாகக கூறபபட்டிருக்கக் கம்பநாடர் அசசரிதத்தைத் தாம வேண்டியவாறு மலைகளையும காடுகளையும் சேனைகளையும் வர்ணித்து வளாததிவிட்டார்.

இரண்டாவது அயோத்தியாகாண்டத்தை வால்மீகிராமாயணத்தில படிப்பது மிகவும் ஆயாசம் தருவதாயிராநின்றது. இங்கே வால்மீகி வாாத்தை கிழவார்த்தையாகக் காண்கின்றது. இங்கே கம்பநாடா, சரிதத்தை வெகுதிறமாக நாடக அமைப்பேபோல உலகத்தோடு மிகபபொருந்துமா றுரைததிருக்கின்றனர். இந்தக் காண்டத்தில உள்ள வேற்றுமையை மாணுககாகள் நேரிலே படித்துப்பாாத்தே கம்பருடைய சாமர்த்தியத்தைச சீாதூககியறியவேண்டும். தமிழ்ராமாயணத்துக்கு வால்மீகமே முதனூலென்று கம்பரே சொலலிவிட்டாா. யுததகாண்டததிற் கூறிய இரணியப்படலம் கம்பருடைய சிருஷ்டி. இராமசரிதத்தில் இரணியவதையை இடைப்பெயது கூறுவது மற்றொன்று விரித்தலென்ற குற்றமாமென்பர் சிலர். பாரகாவியஞ்செய்த ஆசிரியர் இது குற்றமாகுமென்று கொண்டால அங்ஙனங் கூறார். பிரகலாத சரிதத்தில் மிகப் பற்றுடையாராய் அங்ஙனங் கூறினருமல்லர். இந்தச் சரிதத்தை விபீஷணன் வாயில் வைத்தன்றோ கூறியது? ஸ்ரீராமருடைய மகிமையை இராவணனுக்கு வற்புறுத்திக்காட்டி இராவணன் வணங்கி உய்யுமாறு எடுத்துரைத்தது இச்சரிதம்.

ஆகவே இது மற்றொன்று கூறலாகாது. இரணியப்படலமொன்று தவிர ஏனைக்கம்பராமாயணமுற்று மழிந்துவிட்டாலும் பெரிதல்ல; கம்பருடைய கவிதாசாமர்த்தியத்தையும் இயற்கைப்புலமையினையுங் காட்ட இப்படலமொன்றுமே போதுமான சான்றாகும். உயுத்தகாண்டமே கம்பராமாயணத்தில் மிக மிடுக்கான காண்டம் எனத் தமிழ்வல்லார் கூறுவதுண்டு. இவ்விரணியப்படலமோ அவ்வுயுத்தகாண்டத்தின் ஏனைப்படலங்களினும் மிடுக்குடையது. ஆசிரியருடைய கருத்தூக்கமும் நடையும் நவரஸமென்னு மெய்ப்பாடுகளும் இந்தப்படலத்தில் அத்தனை உரம்பெற்றிருக்கின்றன.

கம்பரிடத்தில் மற்றொரு விசேடமுண்டு. அவர் நடையானது சந்தர்ப்பத்திற் கேற்றவாறாக கம்பீரமும் இன்னோசையும் மிடுக்கும் தளர்ச்சியுமுடையதாயிருப்பது. சந்தோஷசெய்தி உரைக்குமிடத்தில் சந்தர்ப்பத்திற்கேற்பக் கூத்தாடவுங் கூடும். விசனகரமானசெய்தி உரைக்குமிடத்தில், படிக்கின்றவன் பாட்டைப் பரபரப்பாக படிக்கப்புகுந்தாலும், அந்தப் பாடல்கள் பரபரப்பாக நாவிலே உழலுவதில்லை. கதாநாயகன் அழுகின்ற இடத்தில் கதையைப் படிக்கின்றவனும் அழுவான்; அவன் களிக்கின்ற இடத்தில் இவனும் களிப்பெய்துவான். இது கவிவல்லோர்க்கு மாத்திரமே கைவந்தமாம்; எல்லார்க்கும் இதுசெய்ய இயலாது.

**கம்பருடைய கவிகதி.**—"ஒட்டக்கூத்தர், கடறாவுபடலம் பாடிவருகின்றனர்; நீர் எம்மாத்திரம் பாடினீர்?" எனக் கேட்ட அரசனையும் பிறரையும் நோக்கிக் கம்பர், "நாம் சேதுபந்தனப்படலம் பாடாநின்றோம்" எனக் கூறினதாகக் கூறப்படும் கன்னபரம்பரையான வரலாறும் அதன்மேல் இராமாயணத்தை இரண்டு வாரத்தில் தினம் எழுநூறு விருத்தமாகப் பாடிமுடித்தனர் எனக்கூறும் வரலாறும் உண்மையென்றே தோற்றுகின்றன. இராமாயணத்தில் எந்த ஏட்டைத் தள்ளிப்பார்த்தாலும் கவிகதி தட்டுத்தடையின்றி நீரோட்டமேபோலச் செல்வது கட்புலனாகும். யாதொரு வரிதானும் வருந்திப்பாடப்பட்டதான குறிகள் யாதொன்றுந் தோன்றுவதின்று. உலகியலை நன்கறிந்தவராய்க் கல்விக்களஞ்சியமாய் கவிபாடுந்திறமுதிர்ந்தவரான கம்பர் அஸாதாரணமான காவியத்தை அநாயாஸமாகவே செ

ய்து முடித்தார். பாஷைநடையின் சூக்குமங்களையும் சொல்லாற் றலையும் பொருளாற்றலையும் நன்குணர்ந்தவராதலின் இவர் கவி பாடாநிற்கையில் கருத்தொன்றனையே கருதியிருப்பர். சொந்தகள் அதற்கிசையயத் தாமே வந்தியையும. "சேதுபந்தனம்வரையில் பா டிவிட்டீரா? அப்படியானல் அந்தப்படலததில ஒரு கவியைச் சொல்லிக்காணீர்" என்ற உடனே

"குமுதனிட்டகுலவரைகூத்தரில்
திமிதிமிட்டுத்திரியுந்திரைகடல்
துமிதமூர்புகவானவர்துள்ளினார்
அமுதமின்னுமெழுமெனுமாசையால்."

என்று அப்பொழுதே பாடினரென்பதற்கு வேறுசான்று வேண் டா. அவர் முதனுள் பாடிய ஆற்றுப்படலத்தில்,

"மலையெடுத்துமரங்கள்பறித்துமா
டிலைமுதற்பொருள்யாவையுமேந்தலால்
அலைகடற்றலையனறணைவேண்டிய
நிலையுடைக்கவிநீத்தமந்நீத்தமே"

என்று பாடியவிருத்தமே அதறகு இன்றளவும் சான்றுபகர்கின் றது. நேற்றுப்பாடிய சேதுபந்தனபடலததின் செய்தி இன்று ஆற்றை வாணிக்கும்போது கற்பனையாக வமைந்ததன்றே? ஆக வே இவர் "எழுந்தநாயிறு விழுவதன்முன் கவிபாடினதெழு நூறே" என்பதில ஐயமிலலை.

**அவர் இயற்றிய ஏனை நூல்கள்.**—கம்பநாடருடைய கவித்திறமெல்லாம இராமாயணததில முற்றும் ஏறிநின்றது. அத் திறம் கட்புலனாகின்ற மற்றநூல் சடகோபரந்தாதி யொன்றுமே யாகும். சரஸ்வதியந்தாதியைச் சிறுபிராயத்தில பாடினார்போ லும். அவ்வந்தாதியில் ஆசிரியரது முதிர்ந்த திறம் கட்புலனாவ தின்று. குமாருருபரர் பாடிய சகலகலாவல்லிமாலையின் சிறப்புத் தானும் கம்பர் பாடிய சரஸ்வதியந்தாதியில துவனிப்பதில்லை. ஆயினும் சரஸ்வதியை உபாசித்துவந்தால வாக்கு வளம் உண் டாகுமென்று நம்பினவரேயாவர்.

"படிகநிறமும்பவளச்செவ்வாயும்
கடிகமழ்பூந்தாமரைபோற்கையும்—துடியிடையும்
அல்லும்பகலுமகவரதமுந்துதித்தால்
கல்லுஞ்சொல்லாதோகவி.

க்காக அமைந்து கிடப்பினும் அதனை இயற்றினர் கம்பரென்றே துணிந்து சொல்வதற்கான ஆதாரம் இல்லை. காஞ்சிபுராணம்-காஞ்சிப்பிள்ளைத் தமிழ்-சோழகுறவஞ்சி-திருக்கைவழக்கம் என்னு நால்களும் கம்பர் இயற்றினரெனச் சிலர் கூறுகின்றனர். இவற்றில் திருக்கைவழக்கந் தவிர மற்றவைகள் அச்சிற் காணாமையால் எவர்க்கருங் கிடைத்தலரிதாயிராநின்றன. அச்சிட்ட பிரதிகளில் தானும் திருக்கைவழக்கம் பிரதிக்குப் பிரதி மாறுபடுதலான் கம்பர் பாடின அடிகள் இன்னின்னவையே எனத் துணிந்து கொள்ளக்கூடவில்லை. கம்பரகராதி இராமாயண வசனம் என்பனவும் எழுதினரெனச் சிலர் கூறுகின்றனர்.

**கம்பருடைய குணவிசேஷம்.**—யாதொரு கவியின் நூலைக் கற்றுவைத்தும் அக்கவியை இன்னதன்மையரென அறிய மாட்டாதவன் தானே நேரிற்கண்ட யாதொரு கவியைத்தானும் இன்னதன்மையரென அறிவதிலன் என்றொரு இங்கிலீஷ் ஆசிரியர் இயம்புகின்றனர். இராமாயணத்தாற் கம்பர் இன்னதன்மையரென அறிதலாகுமோ என்று ஆராய்தல் வேண்டும். அயோத்திமாநகரத்தை,

"ஏகம்முதற்கல்விமுளைத்தெழுந்தெண்ணில்கேள்வி
ஆகம்முதற்றிண்பணைபோக்கியருந்தவத்தின்
சாகந்தழைத்தன்பரும்பித்தருமம்மலர்ந்து
போகங்கனியொன்றுபழுத்ததுபோலுமன்றே."

என வர்ணித்திருத்தலால் இவர் கல்வி கேள்விகளின் அருமையைப் பாராட்டினவரென்பது பெறப்படும். ஆயினும் அக்காலத்துக் கணக்காயர் கல்விகற்பிக்கும் முறையை வியந்தவரல்லரென்பது,

"கல்வியிற்றிகழ்கணக்காயர்கம்பலைப்
பல்விதச்சிறாரெனப்பகர்வபல்லரி
செல்விடத்தல்லதொன்றுரைத்தல்செய்கலா
நல்லறிவாளரினவிந்தநாவெலாம்."

என்ற கார்கால வர்ணனையாற் பெறப்படும்.

"பெருந்தடங்கண்பிறைநுதலார்க்கெலாம்
பொருந்துசெல்வமுங்கல்வியும்பூத்தலால்
வருந்திவந்தவர்க்கீதலும்வைகலும்
விருந்துமன்றிவிளைவனயாவையே."

என்றதனால் இவர் பெண்கல்வியின் நன்மையை அக்காலத்திலே தானே உணர்ந்தவரென்பது தேற்றம்.

"துன்புளதெனின் அன்றோ சுகமுளது"

எனக் கூறினாராதலின் இவர் வறுமையிற் செம்மையைக் கண்டவரென்பதும்,

"யாவையு மில்லார்க்கியையாதவே"

என்றதனால் வறுமையின் கொடுமையைக் கண்டறிந்தவரென்பதும் தெளிவாகின்றன. ஆண்பாலினரைக் காட்டில் பெண்பாலினர் காமமிக்கவரல்லர் என,

"மற்றோர் மருங்குமாதரார்க்கு மனமென்பதொன்றேயன்றோ"

என்றவடியில் வற்புறுத்தினாரேனும், ஆண்பாலினர் கேட்டெய்துவது பெண்பாலினர் தரும் காமவின்பத்தால் என,

"தூமகேதுவெனப்புவிக்குத்தோன்றிய
வாமமேகலைமங்கையரால்வரும்
காமமில்லையெனிற்கடுங்கேடெனும்
நாமமில்லைநரகமுமில்லையே."

என்ற விருத்தத்திலே கூறினர். இவ்வுண்மையைப் பின்னும்,

"மங்கையர்பொருட்டாலெய்துமாந்தர்க்குமரணமென்றல்
சங்கையின்றுணர்திவாலிசெய்கையாற்சாலுமின்னும்
அங்கவர்திறத்தினானேயல்லலும்பழியுமெய்தல்
எங்களிற்காண்டியன்றேஇதற்குவேறுவமையாதோ."

எனவும் வற்புறுத்தினர். சித்திரகூடப் பருவதமுதலான வருணனையால், இவர் எல்லாக்காட்சிகளையும் நேரில்கண்டநுபவித்தவர் என்பது நன்கறியப்படும். கற்பனாசக்தியால் மாத்திரம் அவைகளை நன்குவர்ணிக்க இயலாது என்பது அவ்வருணனைகளைப் படித்தவர்கட்கு மெய்ப்படும். சடையப்பமுதலியாரையும் அவருடன் பிறந்தாரான கண்ணனாரையும் சரராமரையும் இராமாயணத்தில் ஆங்காங்கு புகழ்ந்திருத்தலானும்,

"சிதைவகல்காதற்றாயைத்தந்தையைக்குருவைத்தெய்வ
பதவியந்தணரையாவைப்பாலரைப்பாவைமாரை
வதைபுரிகுநர்க்குமுண்டாமாற்றலாமாறல்மாயா
உதவிகொன்றார்க்கென்றேனுமொழிக்கலாமுபாயமுண்டோ."

எனப் பாடியிருத்தலானும் இவர் மிகவும் செய்ந்நன்றி யறிதலுடையவர் என்பது தோற்றும். கள்ளுண்டலைக் கடிந்து சினந்தவரென்பது பின்வரும் செய்யுளால் போதரும்:—

"வஞ்சமுங்களவும்பொய்யுமயக்கமுமரபிற்கோட்டும்
தஞ்சமென்றாரைநீக்குந்தன்மையுங்களிப்புந்தாக்கும்
கஞ்சமெல்லணங்குந்திருநங்களினுலருந்தினுரை
நஞ்சமுங்கொல்வதல்லானரகினைநல்கா தன்றே"

தமிழையும் தமிழ்நாட்டையுங் குறிக்க நேருகின்ற இடங்களில் அதிக உற்சாகமுடையவராகக் காண்கின்றனர்.

**கம்பர் சைவரோ வைணவரோ.**—என்பதைத் துணிகின்றதில் இருதலைக் கொள்ளியினிடை எறும்பே போல இடர்ப்படவேண்டுவதாயிருக்கின்றது. கம்பர் பிள்ளையின் பெயர் அம்பிகாபதி என்பது உலகப்பிரசித்தம். ஏரெழுபதில் விநாயகவணக்கம் வைத்திருக்கின்றது. இராமாயணத்தில் சிவபெருமானைக் குறிக்கின்ற இடங்கள் பெருமையாகவே குறித்திருக்கின்றன. சில பிரதிகளில் "ஆதியந்தமரியெனயாவையும்" என்றும் சிலவற்றில் "ஆதியந்தம் அரியனயாவையும்" என்றும் இருக்கிறது. ஏனைச் சிறப்புப்பாயிரச் செய்யுள்கள் பொதுப்படத் தெய்வவணக்கங் கூறுகின்றன. ஈதெல்லாமிங்ஙனமிருக்கத் திருக்கைவழக்கம் ஸ்ரீ ஆறுமுகநாவலர் பதிப்பில்,

"பண்ணமைந்த
வேதமொருநான்கினையுமிக்கதமிழ்நாலடியால்
ஓதியுரைத்தேசகருணைபோரங்குநகை"

என வருவது தொழுவூர் ஸ்ரீ வேலாயுதமுதலியார் பதிப்பில் விடுபட்டிருக்கிறது. இவ்வடிகள் குறிப்பது சடகோபரைப்போலும். இராமாயணத்தில் திருவவதாரப்படலத்தில் பெரிய திருவடியான கருடாழ்வாரைக் குறிக்கின்ற இடத்தில்,

"என்னையாளுடையவையன்"

எனக் கூறியிருக்கிறது. இதிற் பிரதிபேதமில்லை. கடிமணப்படலத்தில்,

"என்றுநான்முகன்முதல்யாரும்யாரையும்
நின்றபேரருளினைநீக்கிநீணெறி

சென்றுமீளாக்குறிசேரச்சேர்த்திடு
தன்திருநாமத்தைததாறுஞ் சாத்தியே" என்றும்,

சம்புமாலிவதைப படலத்தில,

"ஐயனுமமைந்துநின்றுழியானளவ்ஞமம்
நெயசுடாவிளக்கிற்றேனறுநெறறியேநெற்றியாக" என்றும்,

பரதன் சூளசெய்கின்ற இடத்தில,

"தழைத்ததண் துளவினேன் தலைவனஅல்லனென்
றழைத்தவன்." என்றும்,

விராதன துதியில்,

"மழுவாளிக்கனறளித்த
ஐயத்தால்சிறிதையமதவிரநதாருமுளரையா." என்றும்,

சரபங்கர் பிறபபுநீங்கு படலத்தில இநதிரன சீராமனைத் துதிசெய்வதில,

"எல்லைவலயங்கள்நினனுழையெனறநநாளளிரியோனை தீரடிஎழுவர்எனநின்ற
தொல்லைமுதல்முனிவாகூளுறறபோதேதொகைநினறஐபமதுடைசதலேயோ
எநதாய்."

என்றும், கவந்தபபடலத்தில,

"மூனறுகவடாயமுளைதநெழுந்தமூலமோ."

என்றும் இனனும் பலவிடஙகளிலும் விஷ்ணுவுக்குப் பரத்துவங் கற்பித்திருக்கிறா. இஙகே எடுததுக் காடடப்பட்டனவெலலாம் சைவருக்கு நிஷ்டூரம உண்டாகாமல கமபா வேண்டுமாஞல் தாமே தவிாத்திருக்கக் கூடிய பாகஙகளே யன்றே. நாலாயிரப்பிரபந்த வியாகியானங்கள் கம்பருடைய பிரயோகஙகளில் சில எடுத்துக் காட்டியிருக்கின்றன. கம்பர் இராமாயணம் பாடு முன்னர் சைவராயிருந்தவர் பின் வைணவராயினர் எனச் சில தமிழ வித்துவாமிசர்கள் கூறுகின்றனர். ஆயினும் ஸ்ரீரங்கத்திலே கமபா கடடுவிதத மண்டபத்திலே சக்கரவர்த்திக்குரிய ஆடம்பரங்களுடனே கம்பரைப் போல சிலாவிக்கிரகம் இயற்றிவைத்திருப்பதனல், இராமாயணத்தைக்

"கண்ணியவரங்கர்முன்னேகவியரங்கேற்றினனே."

என்பதூஉம் ஸ்ரீமந்நாதமுனிகள் முதலியோரால் கவிச்சக்கரவர்த்

இப் பட்டம் அளிக்கப்பட்டாரென்பதூஉம் உண்மையாவதுமன்றி இவர் வைணவர் என்பதை வற்புறுத்துகின்றன. எப்படியும் மேற்காட்டினவற்றால கம்பர வைணவராகவே இறந்துவிட்டனர் என்பது தேற்றமேயாம. இவர் நாட்டரசன் கோட்டையில் வைணவ சம்பிரதாயத்தின்படி சமாதி செய்யபபட்டிருககின்றனர். இதனை இன்றுங் காணலாம்.

முடிவு.—இராமாயணம் பாடிமுடிந்தபிறகு கம்பர கவிதா சந்தத்தை இழந்தனரென்றும், தாம்பாடின பாடலகளைப் பிறர படிக்கும்போது அவை தம்மாற பாடபபட்டன எனபதறியாமல் அதிக ஊக்கத்துடன் கேட்டு ஆநந்திப்பரென்றும் கூறிவருகின் றார்கள். கலவியிற பெரியவர் கமபா எனறு ஐநதாம வேற்றுமை ஏதுப்பொருளுககுக காட்டப்படும உதாரணததாலும், யாதொரு இயந்திரமுதலியவற்றின் கூறுபாட்டை அறியாது அதிசயிக்கின் றவர்கள் இதென்ன கம்பசூததிரமாயிருககிறதே என வழங்கும் வழக்காற்றாலும, கம்பன் வீட்டுககட்டுததறியும கவிபாடும என்ற பழமொழியாலும், விரிவாக எழுதியிருககினற யாதொன்றைக காணகின்றவர்கள் இதென்ன கமபராமாயணமாக இருககிறதே என்பதனாலும், கம்பரெனனும திருநாமம் எககாலததும மறைவதின்றி நிலைபெறுவதாயிறறு.

